இருபத்திமூன்றும் விண்ணப்பத்தில் கேவலம் கர்மத்தி னிருந்தே முக்தியில்லை என்பதை உறுதிப்படுத்தினன்.

இருபத்துநான்காம் விண்ணப்பத்தில் ஆசைப்பட்ட தெல்லாவற்றையும் அளிக்கும் ஸர்வேசுவரன் வேறு புரு ஷார்த்தங்களை அபேக்ஷித்தவர்கட்கு அவர்கள் அபேக்ஷிக் கும் பலவந்தத்தினல் அந்தப் புருஷார்த்தங்களை ஈவன்; மோக்ஷத்தில் ஆசைப்படுபவர்கட்கு மோக்ஷத்தையே மன முவந்து அருளுவான் என்பதைக் காட்டினன்.

இருபத்தைந்தாம் விண்ணப்பத்தில் காலகர்ம ஸ்வபாவ முதலாயவற்றினின்றே அபேக்ஷிதபலம் கிடைக்குமென்னும் மயக்கத்தைத் தொலைத்தான்.

இருபத்தாறும் விண்ணப்பத்தில் ஸ்ரீமந் நாராயணனைத் தவிர வேறொருவருக்கும் ரக்ஷணஸாமர்த்தியம் இல்லை என் பதைத் தெரிவித்தான்.

இருபத்தேழாம் விண்ணப்பத்தில் மோக்ஷத்தை அபே க்ஷிக்கிறவன் தன்னுடைய தோஷங்களை எண்ணி பயப்பட வேண்டாம், பகவத் குணங்களையேயெண்ணி தைர்யமா யிருக்க வேண்டுமென்று விளக்கினன்.

இருபத்தெட்டாம் விண்ணப்பத்தில், ஸம்ஸாரத்தின் மூலமெனப்படும், அவித்யா, கர்ம, வாஸனு, ருசி, ப்ரக்ருதி ஸம்பந்தங்களை ஜகதீச்வரன் தானே விடுவிப்பன் என்கிற தைப் பிரகாசப்படுத்தினன்.

இருபத்தோன்பதாம் விண்ணப்பத்தில் ஸ்ரீமந் நாராயண னுடைய திவ்ய ரூபம் அப்ராக்ருதமாய் முக்த போக்யமா யிருக்குமென்பதை அனுவதித்தான்.

முப்பதாம் விண்ணப்பத்தில் பரவாஸுதேவனுடைய கைங்கர்யம் முக்தர்க்கு பரம போக்யமாயிருக்குமென்ப தைச் சொல்லி நூலை முடித்தான்.

## முதல் விண்ணப்பம்

பா.....பரவாஸுதேவ! அடியாரைக் காப்பாற்றும் பொருட்டு, வ்யூஹாதிபாவமும்[1] ஏற்றுக்கொண்டாய் — என்று யதுசைலநாதனின் திருவடித் தாமரைகளில் நிகரில்லாதவனென்னும் விருதுள்ளவன் விண்ணப்பம் செய்தான்.

ஸ்ரீமந் நாராயணா! ஸ்ரீ ச்ரிய: பதியாயும் அகில ஹேயப்ரத்யநீகனாயும் ஸகல கல்யாண குணாத்மகனாயும், அவாப்தஸமஸ்த காமனென்னப்பட்டு, ஸ்ரீ வைகுண்டத்தில் திவ்ய மஹிஷீவர்க்க ஸமேதனாய் அநந்த கருட விஷ்வக்ஸேனாதி நித்யர்க்கும் முக்தர்க்கும் உன்னுடைய ஸேவாஸாம்ராஜ்யத்தில், முடிவில்லாதஆனந்தத்தையுண்டுபண்ணிக்கொண்டு போராநிற்க, உன்னுடைய திருவுள்ளத்திற்பிறந்த ஆகஸ்மிகதயையினால்[6], ப்ரளய காலத்தில் அவ்யக்த ஸூக்ஷ்மப்ரக்ருதியில் அடங்கி, மெழுகில் அழுங்கியிருக்கும் தங்க உரைப்பொடி (துகள்) போல், ரூபத்தை அழிந்திருக்கிற, கர்மத்தில் கட்டுண்டிருக்கிற ஜீவாத்ம வர்க்கத்தை, நித்யமுக்தரைப்போல் மோக்ஷாநந்தத்தில் ஈடுபடுத்த வேண்டுமென்ற உன் ஸத்ய ஸங்கல்பத்தால், ப்ரக்ருதியுள் புகுந்து, மஹதஹங்காரங்களையும் பஞ்ச தந்மாத்ரங்களையும் பஞ்சமஹாபூதங்களையும் உண்டுபண்ணி, இவைகளினின்றும் ப்ரும்மாண்டத்தை ச்ருஷ்டித்து, அது தன்னில் ப்ரும்மாதிஸுர, நர, திர்யக், ஸ்தாவரங்களென்னும் நான்கு வகையில் அவரவர் பூர்வகர்மானுகுண தேகங்களையும், அந்தந்த தேகோசிதமான ஜ்ஞான சக்த்யாதிகளையும் ஈந்து. நீ ப்ரதானம் பண்ணின கரணகளேபராதிகளினின்றே அவர்கள் ஏதேனும் பொல்லாங்கைப் பொருள

அறியாமல் செய்து அழிந்துபடாமல், தக்கவையிவை, தகாதவையிவையென்னும் அறிவைக்கொடுக்கும் வேத சாஸ்திரங்களைக் காருண்யத்தால் அளித்தாய்.

இவ்வளவிலும் உடையவன் கட்டளையைப் பிடித்து நடக்கமாட்டாத ஜடரின் இடர்களைப் போக்கிக் காப்பாற்றும் பொருட்டு, அவர்களுடன் இருப்பேனென்று மும்மூர்த்திகளின் நடுவிலும், க்ஷீராப்தியிலும், இமையோர் வாஸஸ்தலமான சுவர்க்கம் முதலான இடங்களிலும் நின்றாய். அப்படியானாலும் தேவர், முனிவர், யோகிகள் இவர்களன்றிக்கே மற்றைய மனிதர்க்கு உடனாய் மன்னிவாழ ஆகாமையால், மனிதர்களில் ஆபால கோபாலர்களுள்ளும், கன்று, மாடு, கரடி, அணில், மந்தி முதலான திர்யக் ஜாதிகளுக்கு ஒரு நீராகக் கலந்து பரிமாறலாம்படிவாழ ராம க்ருஷ்ணாத்யவதாரங்களைக் க்ருபையால் செய்தருளினாய். ஆகிலும் அந்தந்த தேசங்களிலும் அந்தந்தக் காலத்திலும் இருந்தவர்களுக்கு அன்றிக்கே, மற்றையோர்கட்கு உபகாரமாகாததினால், ஸர்வதேச, ஸர்வகால, ஸர்வாவஸ்தைகளிலும் நிற்கிற ஸத்வசேதனாசேதனவர்க்கங்களிலும் வியாபித்திருந்து மனமொழிமெய்கள் மூன்றிலும் ப்ரேரித்துக் கொண்டு அந்தர்யாமியெனப்பட்டாய். இப்படியானாலும் எங்காகிலும் ஒருவனுக்கு மாத்திரம் அநேக ஜன்மங்களால் ஸாத்யமான யோகத்யான விஷயம் என்பதன்றி யெல்லாருக்கும் கூடவிருந்தும் இல்லாதவன்போல் ஆனபடியால் எல்லா ஜனங்களும் சர்மசக்ஷுஸ்ஸினாலேயே ஸாக்ஷாத்கரித்து அவரவர்கள் மனமிசைந்த கைங்கர்யங்களை நிறைவேற்றி க்ருதார்த்தராகும்படி ஸர்வ ஸுலபமென்னும் அர்ச்சாவதாரத்தைக்கொண்டு, சிலகாலம் ஸத்யலோகத்தில் பிரமனின்றும் ஆராதனத்தை அங்கீகரித்து

பின்பு ஸநத் குமாரருக்கு வச்யப்பட்டு, அவருடன் உத்தர பதரிகாச்ரமத்திற்கு எழுந்தருளி, அவ்விடத்தில் ஸாக்ஷாத் அஷ்டாக்ஷர உபதேச தேசிகனென்று கொண்டாடப்பட்டு, உன் ரூபாந்தரமான "நர" முனியினுல் அர்ச்சனையை (ஆராதனையை) ப்பெற்று, மேலும் இந்த கர்னுடக மண்டலத்திற்கு மண்டனமெனப்படும் (சிரோபூஷணம்) யதுகிரி சிகரத்தை இருப்பிடமாக உகந்து கோயில்கொண்டு, ஸகல ஜனங்களையும் ரக்ஷிப்பதில் தீக்ஷிதனென்று புகழப்பட்டாய். அன்றியும் ஸர்வஜன ஸாதாரணனன்றிக்கே, இந்த யதுவம்சத்தில் பிறந்தவர்களுக்குக் குலதெய்வமாய் தபா விசேஷத்தினுல் காப்பாற்றுகிறவனென்றபடியால், இப்பொழுது என்னிடத்தில் அகாரணமான கருணைக்கடல் அலைகளாய்ப் பொழிந்து க்ஷமிக்கவும், க்ஷமிக்கவும், அநந்யஜனவல்லப ! ஸ்ரீ யது சைலவல்லபா !

---

## குறிப்புகள்

1. ஈச்வரஸ்வரூபந்தான், பரத்வம், வ்யூஹம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சாவதாரம் என்று ஐந்து பிரகாரத்தோடே கூடியிருக்கும்.

அதில் பரத்வமாவது — அகால கால்யமான நலமந்தமில்லாததோர் நாட்டிலே நித்யமுக்தர்களுக்குப் போக்யனாய்க் கொண்டெழுந் தருளியிருக்குமிருப்பு.

வ்யூஹமாவது — ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரார்த்தமாகவும், ஸம்ஸாரி ஸம்ரக்ஷணார்த்தமாகவும், உபாஸகானுக்ரஹார்த்தமாகவும், ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தரூபேண நிற்கும் நிலை.

விபவம் — அநந்தமாய் கௌண முக்யபேதத்தாலே பேதித்திருக்கும். பரிகணித்துத் தலைக்கட்டப்போகாதபடி அநந்தமாயிருக்கும். இதர ஸஜாதீயமாய்க்கொண்டு ஆவிர்ப்பவிக்கை. இதில் கௌணமென்பது — அவரமென்றபடி. முக்யமென்பது ச்ரேஷ்டமென்றபடி. கௌணமாவது ஆவேசாவதாரம்; முக்யமாவது ஸாக்ஷாதவதாரம்.

அந்தர்யாமித்வமாவது — அந்த: ப்ரவிச்ய நியந்தாவாயிருக்கை, ஸ்வர்க்கநரகப்ரவேசாதி ஸர்வாவஸ்தைகளிலும் ஸகல சேதநர்களுக்கும் துணையாய் அவர்களை விடாதே நிற்கிற நிலைக்குமேலே சுபாச்ரயமான திருமேனியோடே கூடிக்கொண்டு அவர்களுக்கு த்யேயனாகைக்காகவும், அவர்களை ரக்ஷிக்கைக்காகவும், பந்துபூதனாய்க்கொண்டு ஹ்ருதயகமலத்திலே எழுந்தருளியிருக்குமிருப்பு.

அர்ச்சாவதாரமாவது—'தமருகந்ததெவ்வுருவம்' என்றபடியே சேதநர்க்கபிமதமான த்ரவ்யத்திலே விபவவிசேஷங்கள்போலன்றிக்கே தேசகாலாதிகாரி நியமமில்லாதபடி ஸந்நிதிபண்ணி அபராதங்களைக் காணாக்கண்ணிட்டு அர்ச்சகபராதந்த்ரமான ஸமஸ்தவ்யாபாரங்களையுமுடையவனாய்க்கொண்டு கோயில்களிலும் க்ருஹங்களிலும் எழுந்தருளி நிற்கும் நிலை.

2. ஸ்ரீமந் நாராயணன் — நாராயண சப்தார்த்தம் முழுவுணர்வும் முழுநலமுமான மிக்காரை உடையனல்லன்; பூமியிலும் ஊர்த்வலோகத்திலு முண்டான ரூபவத்தான அசித்தையும் ரூபரஹிதமான சித்தையுமுடையவன். அதீதமாயும், ஆகாமியாயும் உள்ள வஸ்துக்கள் தாமேயாய் நின்றவன். தர்மங்களோடு, தர்மிகளோடு வாசியற்ற தனக்கு ப்ரகாரமாம்படி நின்ற ஸர்வஸ்மாத்பரன்.

3. ச்ரிய : பதியாய்—பிராட்டி ஈச்வரனுக்கு ப்ரதான ரூபகையாலும், ஸர்வப்ரகாராதிசய ஹேதுவாகையாலும், புருஷகாரத்வேந பகவத் கடாக்ஷத்திலும், தத்பலாஸ்வய பிசாரித்வத்திலும், ப்ரதான ப்ரயோஜனகையாகையாலும், நித்யஸம்ஸாரி விஷயத்தில் ஸ்வதந்த்ரனை ஈச்வரனுடைய கடாக்ஷம் லக்ஷ்மீ புருஷகாரமன்றிக்கே கூடாதாகையாலும், இந்த விசேஷணத்தை முதலில் சொல்லிற்று. புருஷகாரை யான பிராட்டியாலே உத்பூதங்களான வாத்ஸல்யாதி குணங்களையுடையவன்.

4. அகிலஹேயப்ரத்யநீகனுகையாவது — தமஸ்ஸுக்கு தேஜஸ்ஸுபோலேயும், ஸர்ப்பத்திற்கு கருடனைப் போலேயும், விகாராதி தோஷங்களுக்குப் பிரதி படமா யிருக்கை. த்ரிவிதசேதனுசேதனதோஷமும் ஈச்வரனுக்கு வாராது.

5. ஸகலகல்யாணகுணுத்மகனுய்—ஆச்ரிதர்க்கு பரம போக்யமா யிருக்கை. ஆச்ரிதர்க்கு கல்யாணப்ரதத்வத்தில் ஜாகரூகனுயிருக்கை.

6. அவாப்த ஸமஸ்தகாமனுய்—ஸகலபோக்ய வஸ்துக்களையுமுடையவன், குறைவற்றவன்.

7. திவ்யமஹிஷீவர்க்க ஸமேதனுய் — லக்ஷ்மீ, பூமி, நீளாஸமேதனுய்.

8. ஆகஸ்மிகதயை — நிர்ஹேதுகக்ருபை. (காரண மன்றி உண்டான அருள்.)

9 ப்ரக்ருதி—மிச்ரஸ்த்வமானது. ஸத்வ ரஜஸ் தமஸ் ஸுக்கள் மூன்றோடுங்கூடி பத்தசேதனர்களுடைய ஜ்ஞாந

நந்தத்திற்குத் திரோதாயகமாய் விபரீதஜ்ஞானஜனகமாய் நித்யமாய், ஈசுவரனுக்கு க்ரீடாபரிகரமாய், ப்ரதேசபேதத்தாலும் காலபேதத்தாலும் ஸத்ருசமாயும், விஸத்ருசமாயுமிருக்கும் விகாரங்களை யுண்டாக்கக்கடவதாய், ப்ரக்ருதி, அவித்யை, மாயை என்கிற பெயர்களையுடைத்தாயிருக்கும் அசித்விசேஷம்.

ப்ரக்ருதியென்பது — விகாரங்களைப் பிறப்பிக்கையாலே; அவித்யையென்கிறது — ஜ்ஞான விரோதியாகையாலே. மாயையென்பது—விசித்ரச்ருஷ்டியைப் பண்ணுகையாலே.

10. மஹதகங்காரங்கள் — வைகாரிகப், தைஜஸம், பூதாதி.

11. ஸ்ருஷ்டி—இரண்டாம் விண்ணப்பத்தின் குறிப்பில் பார்க்கவும்.

12. ஜடர்—மூடர், அறிவீனர்.

13. சேதனசேதனங்கள்—சித்தும், அசித்தும், ஈச்வரனும்.

சித்தென்பது—ஆத்மா, சைதன்யாதாரமான வஸ்து.

அசித்து — ஜ்ஞானசூன்யமாய், விகாராஸ்பதமா யிருக்கும் சைதன்ய ஆதாரமான வஸ்து.

ஈச்வரன் அகிலஹேயப்ரத்யநீக, அநந்த ஜ்ஞாநாநந்தைகஸ்வரூபனாய், ஜ்ஞானசக்த்யாதி கல்யாணகுண பூஷிதனாய் ஸகல ஜகத்ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரகர்த்தாவாய் "ஆர்த்தொஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ" என்கிற சதுர்வித புரு

க்ஷர்களுக்கும் ஆச்ரயணீயனுய், தர்மார்த்தகாமமோக்ஷாக்ய சதுர்வித பலப்ரதனுய், விலக்ஷணவிக்ரஹயுக்தனுய், லக்ஷ்மீ பூமி நீளாநாயகனுயிருக்கும், "ஒரு புருஷவிசேஷமன்றிக்கே சித்சிந்நியந்தா" வாய், ஸகல சேதநாசேதன விலக்ஷணமாக வும், இவற்றுக்குக் காரணமாகவும், வியாபகமாகவும், தாரக மாகவும், நியாமகமாகவும், சேஷியாகவும் அறியவேண்டும்.

14. ஸாக்ஷாத்காரம்—நேரிலுணர்கை, கருவிகரணுதி களுக்கெல்லாம் ஸாக்ஷியாயிருப்பது.

15. க்ருதார்த்தர்—கருமமுடித்தோர்.

16. உத்தரபதரிகாச்ரமம் — வடநாட்டுத் திருப்பதி களில் ஒன்றுன பதரிகாச்ரமம். இந்த திவ்யதேசத்தில் ஸர்வேச்வரன் தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய்க் கொண்டு, நரநாராயணுவதாரம் செய்தருளி, அதில் நாரா யணுக இலந்தை மரத்தின் கீழே தபோநிஷ்டராய் ஜ்ஞான முத்ரையோடு வீற்றிருந்து, ஸர்வாம்சபூதனுய் சிஷ்யனுன நரனுக்குத் திருமந்த்ரத்தை உபதேசித்து தத்வபாஜன லோகத்தை உஜ்ஜீவிப்பித்தருளினுன்.

17. அநந்யஜனவத்ஸலபா — அநந்யப்ரயோஜனனுய்த் தன்னையே ஆச்ரயித்தவர்களுக்கு எளியனுனவன்.

18. ஸ்ரீயதுசைலவல்லபா — யதுபர்வதமென்னும் திருநாராயணபுரத்தில் ப்ரியமுள்ளவனே, மற்றும் நாய கனே.

---

## இரண்டாம் விண்ணப்பம்.

பா— "திருமாலே! நீயே ஜகத்தை ஒரு முறையில் படைத்துக்காப்பாற்றி வயிற்றில் சேர்த்துக்கொள்கிறாய். ஆகையால் நீ பரப்ரம்ஹம்" என்று இந்த நரபதி, யது கோத்ரபதிக்கு[1] விண்ணப்பம்செய்தான்.

பரப்ரம்ஹ[2] ஸ்வரூபா! இந்த உலகம் எந்த வஸ்துவி லிருந்து பிறக்கிறதோ, யாதொன்றால் ஜீவிக்கின்றதோ, யாதொன்றில் லயிக்கிறதோ, அந்த வஸ்துவே பரப்ரம்ஹம் என்று குறிப்பிட்டு, இப்பேர்ப்பட்ட ஜகத்காரணவஸ்துவும் நீயே, என்று வேதாந்தங்கள் பற்பல வகையில் ஸாமான்ய. விசேஷ சப்தங்களால் உன்னையே புகழ்ந்தன. இப்படியிருக்கும் நீ, மஹதாதி தத்வக்ரமத்தில் பஞ்சமஹாபூதங்களை உண்டுபண்ணி, அவைகளிலிருந்து பிரும்மாண்டத்தைப் பண்ணி, அதனுள் பிரும்மாதி தேவதைகளைச் சிருஷ்டித்து, அவரவர்கட்கு ஓரோர் அதிகாரத்தை எல்லைப்படுத்திச் சிலரை ஆக்குவது, காப்பது, அழிப்பது, என்னைப்பட்ட உன் கைங்கர்யத்தில் நியமித்தாய். அவர்களும் ஜகத்தில் ஏக தேசத்தில் உன்னுடைய ஆஜ்ஞானுஸாரம் படைப்பதும் காப்பதும் அழிப்பதுமாக இருக்கிறதனால், அவர்களைக் கொண்டாடுமிடையில் நான்முகனே ஜகத்காரணனென்றும், ருத்ரனே ஜகத்காரணனென்றும், கொண்டாடுவார்கள். இந்த நிலைமையை அறியாதவர் மயங்குவர். ஒருவரையும் ஸ்தோத்திரம் செய்யும் ப்ரஸ்தாபமே யில்லாமல் ஜகத் ஸ்ருஷ்டிக்ரமம் சொல்லுமிடத்தில் விசாரம் செய்ததில், ஆதியில் நாராயணனே மிஞ்சியிருந்தானென்றும், அவன் உந்தித்தாமரையில் பிரமன் வெளிப்பட்டானென்றும், அவனுடைய நெற்றிவேர்வையிலிருந்து ருத்ரன் பிறந்தானென்

றும் சொல்லுதலால், நீயே ஜகதாதிகாரணனான பரப்ரம்மம் என்கிறதை ஸாத்விகரறிவித்தறிந்த நான், என் மூவகைத் துன்பங்களையும் போக்கடிக்க வேணுமென்று உன்னடி நிழல் புகுந்தேன், அநந்யஜனவத்ஸலபா! ஸ்ரீயதுசைலவல்லபா! என்னை ஆற்று! என்னை ஆற்று!

---

குறிப்புகள்

1. யதுகோத்ரபதி — திருநாராயணபுரத்திருநாரணன், யதுகிரிநாதன்.

2. பரப்ரப்ஹம், ஜகத்ஸ்ருஷ்டிக்ரமம், ஜகத்காரணன், ஜகதாதிகாரணன்.—ஆளவந்தார் ஸ்தோத்ரரத்னம் — ச்லோகங்கள் 11, 12, 13, 14ஐயும் ஸ்ரீமான் அண்ணங்கராச்சார் ஸ்வாமி அருளிச்செய்த "ரத்னப்ரபா" என்னும் வ்யாக்யானத்தையும் பார்க்கவும்.

எல்லா பிரபஞ்சத்திற்கும் ஆதாரமாகவும், நியாமகனாகவும் சேஷியாகவும், ஸ்ரீமன் நாராயணனேயாவான். சிவனும் பிரமனும் பரதத்துவமாயிருக்கக் கூடாதவர்கள்.

பிள்ளைப்பெருமாளையங்கார் பாடல் — மங்கை பாகன் சடையில் வைத்த கங்கை யார் பதத்து நீர்? வசனமேவு முனிவனுக்கு மைந்தனானதில்லையோ? செங்கையாலிரந்தவன் கபாலமாரகற்றினார்? செய்யதாளின் மலரான் சிரத்திலானதில்லையோ? வெங்கண் வேழமூலமென்ன வந்ததுங்கள் தேவனோ? வீறுவாணனமரிலன்று விறலழிந்ததில்லையோ? அங்கண் ஞாலமுண்டபோது வெள்ளிவெற்பகன்றதோ? ஆதலாலரங்கனன்றி வேறு தெய்வமில்லையே."

"உய்ய உலகுபடைக்கவேண்டி உந்தியில் தோற்றினாய் நான்முகனை." திருநாபிக்கமலத்தில் நாராயணன் நான்முகனைப்படைக்க, நான்முகனும் சங்கரனைப்படைக்க இப்படியே மேன்மேலும் லோகஸ்ருஷ்டி நிகழ்ந்தது.

ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம்—ஈச்வரன் ஸ்ருஷ்டிக்கையாவது—அசித்தைப் பரிணமிப்பிக்கையும், சேதனர்க்கு சரீரேந்திரியங்களைக் கொடுத்து, ஜ்ஞானவிகாஸத்தைப் பண்ணிவைக்கையும்.

ஸ்திதிப்பிக்கையாவது—ஸ்ருஷ்டமான வஸ்துக்களிலே பயிருக்கு நீர்நிலை போல அநுகூலமாக ப்ரவேசித்து நின்று ஸர்வரக்ஷைகளையும் பண்ணுகை.

ஸம்ஹரிக்கையாவது—அவிநீதனை புத்ரனைப் பிதா விலங்கிலிட்டு வைக்குமாப்போலே, விஷயாந்தரங்களிலே கைவளருகிற கரணங்களைக் குலைத்துவிட்டுவைக்கை.

---

## மூன்றும் விண்ணப்பம்.

பா— "நின் கணக்கில்லாத கல்யாண குணங்களை இவ்வளவென்று கணக்கிட அரிதாகிலென்ன? நீ என் ஹ்ருதயத்தில் புகுவாய்" என்று அந்த ஜகதீச்வரனுக்கு ப்ரீதியுடன் ஆட்சி செய்யுமவன் அன்புடன் உரைத்தான்.

அப்ரமேய! ஜகத்தில் ப்ரமேயமென்றால் அறியத்தகுந்த வஸ்து. அந்த வஸ்துவையறிய ப்ரமாணங்கள் ப்ரத்யக்ஷமென்றும், அநுமாநமென்றும், சப்தமென்றும் மூன்று வகைப்படும். அவைகளில் ப்ரத்யக்ஷமென்பது இந்திரியங்களுக்கும் பொருள்களுக்கும் கிட்டின ஸம்பந்தத்தினால் பிறக்குமறிவு. இது ஆறு வகைப்படும். அதெப்படியெனில், கண் திறந்து ஒரு வஸ்துவைப் பார்த்தால் இது கறுப்பு, இது வெண்மை என்று முதலாகப் பிறக்குமறிவு சாக்ஷுஷ ப்ரத்யக்ஷமெனப்படும்; செவிசாத்துகையில் (கேட்கையில்) இஃதிந்தமாதிரியான ஓசை, இது இவ்வகையான வார்த்தை, இது இந்த அக்ஷரம், இவை முதலாகப் பிறக்குமறிவு ச்ராவண ப்ரத்யக்ஷமெனப்படும்; நாவினால் நவிற்று இது புளிப்பு, இது இனிப்பு, இது உப்பு, இவை முதலாகப் பிறக்குமறிவு ஜிஹ்வாப்ரத்யக்ஷமெனப்படும்; நாசியால் ஒன்றை மணத்தால் இது ஸுகந்தம், இது துர்க்கந்தம், இவை முதலாகப் பிறக்குமறிவு க்ராணப்ரத்யக்ஷமெனப்படும்; சரீரசர்மஸ்பர்சமாகில் இது வெப்பம், இது தட்பம், இவை முதலாக பிறக்குமறிவு ஸ்பார்சிகப்ரத்யக்ஷமெனப்படும்; மனதில் எண்ணுகையில் தனக்கு இப்பொழுது இன்பமாயிருக்கும், இப்பொழுது துன்பமாயிருக்கும், இவை முதலாகப் பிறக்கும் அறிவு மானஸப்ரத்யக்ஷமெனப்படும். இப்படி ப்ரத்யக்ஷம் ஆறுவகையாயிருக்கும். அநுமாந

மென்பது—வேறொன்றை விட்டுத்தான் ஒரு இடத்திலும் பிரிந்திராத வஸ்துவைப்பார்த்து, அந்த இடத்தில் அந்த மற்றைய வஸ்துவை அறிவது. அஃதெங்ஙனேயெனில் — நெருப்பைவிட்டு புகையிராதென்ற நியமத்தைப் பாகசாலையில் நிச்சயித்து, மலைமுதலான விடங்களில் வேறொரு புகையைக்கண்டு, அவ்விடம் நெருப்பு உண்டென்று அறிதல் அநுமான ப்ரமாணமெனப்படும். சப்தப்ரமாணமாவது— இருக்கிறதை இருக்கிறபடி அறிவிக்கும் வசனம். அதுவும் லௌகிகமென்றும் வைதிகமென்றும் இருவகைப்படும். லௌகிகமென்பது லோகத்தில் ஆப்தர் (நண்பர்) சொல்லும் வசனம். வைதிகமென்பது வேதம் முதலான பதினான்கு[1] வித்யைகள். இந்த ப்ரத்யக்ஷாநுமான சப்தங்களென்னும் மூன்று ப்ரமாணங்களிலிருந்தும் உன்னுடைய ஸ்வரூப, ரூப குண[2] விபவாதிகளில் கொஞ்சம், கொஞ்சம் அறியப்படுமன்றிக்கே இப்படியென்று பரிச்சேதித்தல் (தெரிந்துரைத்தல்) அரிதானதால் நீ அப்ரமேயனெனப்படுகிறாய். ஆகிலும் உன்னுடைய அடியார்க்கு எளியனாயிருக்கும் தன்மையைப் பிரகாசிப்பித்து என்னுடைய உள்ளத்தில் கோயில்கொள்ள வேணும், கோயில் கொள்ளவேணும், அநங்கஜனலாவலபா! ஸ்ரீயதுசைலவல்லபா!

---

## குறிப்புகள்

1. பதினான்கு வித்யைகள் — நான்காம் விண்ணப்பத்தைப் பார்க்கவும்.

2. ஸ்வரூபம் — அகிலஹேயப்ரத்யநீகத்வத்தாலும், கல்யாணைகதாநத்வத்தாலும், ஸ்வேதரஸமஸ்தவஸ்துவிலக்ஷ

ணமாய், விபுத்வாத் தேசத: பரிச்சேதராஹிதமாய், நித்யத்வாத் காலத: பரிச்சேதராஹிதமாய், ஸர்வமும் தனக்குப் பிரகாரமாகித்தான் பிரகாரியாய், தனக்கொருப்ரகார்யந்தரமில்லாமையாலே வஸ்துபரிச்சேதராஹிதமுமாய், ஜ்ஞாநாநந்தமயமாய், ஜ்ஞாநபலைச்வர்யாத்யநந்தகல்யாணகுணகணமஹோததியாய், ச்ரிய: பதியாய், ஸ்வேதரஸமஸ்தத்தையும் வ்யாபிக்குமிடத்தில் அப்ராக்ருதமாய், சுத்த ஸத்த்வமயமாய், ஸ்வாஸாதாரணமாய், புஷ்பஹாஸஸுகுமாரமாய், புண்யகந்தவாஸிதாநந்ததிகந்தராளமாய், ஸர்வாபாச்ரயமாயுமிருந்துள்ள திவ்யவிக்ரஹம்போலே, வியாபித்து, தரித்து, நியமித்து, இப்படி ஸமஸ்தப்ரகாரத்தாலும், ரக்ஷகமாய்க்கொண்டு சேஷியாயிருக்கும்.

ரூபம் — அப்ராக்ருதமான சோதிவடிவு.

குணம் — அளவிட அரிதானவை, ஆச்ரயணஸௌகர்யாபாதகம், ஆச்ரயகார்யாபாதக குணங்கள் — வாத்ஸல்ய, ஸ்வாமித்வ, ஸௌசீல்ய, ஸௌலப்ய, ஜ்ஞாந, சக்தி, பூர்த்தி ப்ராப்தி. ஏழாம் விண்ணப்பத்தைப் பார்க்கவும்.

---

## நான்காம் விண்ணப்பம்.

பா— "வேதத்திலும் அதனர்த்தமறுதியிடுகிற[1] புரா ணங்களிலும் நீ உன்னைத்தெளிவாய்க் காண்பித்துக்கொள்ளு கிறாய்" என்று அன்புடன் நற்குணன் யாதவகிரிநாதன் திரு வடியில் விண்ணப்பம் செய்தான்.

ஸகல வித்யாப்ரவர்த்தகா! வித்யைகள்—வேதங்கள் நான்கும், அங்கங்கள் ஆறும், தர்க்கமும், மீமாம்ஸையும். புராணமும், தர்மசாஸ்திரமும், ஆயுர்வேதமும், தனுர் வேதமும், காந்தர்வமும், அர்த்தசாஸ்திரமும் என்று பதி னெட்டு வகையாயிருக்கும். அவைகளில், ருக், யஜுஸ், ஸாம, அதர்வமென்கிற நாலு வேதங்களும், பூர்வபாகத்தில் (முதற்பகுதியில்) தர்மம், அர்த்தம், காமம்[2] என்னும் மூன்று வர்க்கத்திற்கும் ஸாதகமான[3] கர்மத்தைச்சொல்லும்; உத்தரபாகத்தில் (பிற்பகுதியில்) உன் ஸ்வரூப, ரூப, குண விபவாதிகளைச் சொல்லி மோக்ஷோபாயத்தைக் காட்டும். அங்கங்களில் சிக்ஷையென்கிறது—ஸ்வர, வர்ண, மாத்ராதி களை நிச்சயிக்கிறது. வ்யாகரணமென்பது — ப்ரக்ருதி[4a] ப்ரத்யயாதி[b] களிலிருந்து அர்த்தத்தைச் சொல்லும் பதங் களை ஏற்படுத்துகிறது. சந்தஸ்ஸென்பது[c] காயத்ரீ, த்ரிஷ் டுப், அனுஷ்டுப், முதலான சந்தோலக்ஷணங்களை நிச்சயிக் கிறது. கல்ப ஸூத்ரமென்பது—வேதத்தில் சொல்லப் பட்ட கர்மத்தை உபயோகிக்கையை நிதானிக்கிறது. ஜ்யோ திஷமென்பது கர்மத்தை ஆசரிக்கும் காலத்தை ஏற்படுத்து கிறது. வேதபுருஷனுக்கு—சந்தஸ் பாதங்களும், கல்ப ஸூத்ரம் கைகளும், வ்யாகரணம் முகமும், சிக்ஷை க்ராணமும் (மூக்கும்), ஜ்யோதிஷம் கண்களும், நிருக்தம்

செவிகளாயுமிருப்பதினால், இவை யாறும் வேதாங்கங்க ளெனப்படும்.

தர்க்கமென்பது வேதார்த்தங்களை யுக்திகளால் ஸ்திரப் படுத்துகிறது. மீமாம்ஸையென்பது வேதார்த்தங்களை, பூர்வபக்ஷ[5] ஸித்தாந்த ரூபமாய் ஆராய்ந்து நிச்சயிக்கும். புராணங்களென்பவை ஜகத் ஸ்ருஷ்டியும், ஸம்ஹாரமும், மந்வந்தரங்களும், வம்சமும், வம்சங்களில் பிறந்தவர்கள் சரித்திரமும் சொல்லுகின்றன. அவை பிராம்ஹம், பாத்மம் முதலான பதினெட்டு வகையாயிருக்கும்.

தர்மசாஸ்திரமென்பது—ஆசார[6] வ்யவஹாரப்ராயச் சித்தங்களைச் சொல்லும். மனு, யாஞ்யவல்க்யம் முதலாய் பதினெட்டு வகையாயிருக்கும்.

ஆயுர்வேதமென்பது — நோய்களின் ஆதிகாரணம், பரிஹாரம் முதலியவைகளை நிரூபிக்கும்.

தனுர்வேதமென்பது—அஸ்த்ர[7] சஸ்த்ர [8]உபயோகம், பின்வாங்குகை முதலியவற்றை நிரூபிக்கும்.

காந்தர்வமென்பது—நடனம், கானம், வாத்தியம் முதலியவற்றை நிரூபிக்கும்.

அர்த்த சாஸ்திரமென்பது — பிரஜாபரிபாலனாதி ராஜ நீதிகளை நிரூபிக்கும். இந்த பதினெட்டு வித்யைகளையும் நீயே லோக நன்மைக்காக பிரஸித்தி செய்ததனால், நீயே ஸகல வித்யாப்ரவர்த்தகனென்னப்படுவாய். இந்த எல்லா வித்யைகளிலும் ப்ரதானமான வேதாந்தத்தில்[9] ப்ரகாசமான உன் ஸ்வரூபத்தை அறிவித்து என் மனதின் அஞ் ஞானத்தை நீக்கி, உன் அடிகளில் ஜ்ஞானபக்தியை முற்ற

வைக்கவும், மூற்றவைக்கவும், அநந்யஜனஸுலபா ! ஸ்ரீய து சைலவல்லபா !

---

## குறிப்புகள்

1. வேதாந்தத்தின் உண்மையை யறியவேண்டுமானால் ஸ்ம்ருதிதிஹாஸ புராணங்களை ஆதாரமாகக் கொள்ளா விடில் உண்மை தெரியாது.

2. தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் — புருஷார்த்தம் சதுர்விதமாயிறே இருப்பது. தர்மமாவது — இஷ்டா பூர்த்தங்கள். இஷ்டமாவது யாகாதிகள், பூர்த்தமாவது கர்த்தாதி ; ஸாதனதயா புருஷார்த்தமாயிருக்கும்.

கர்மமாவது—ஐஹிக, பாரலௌகிக போக்யபதார்த்தானுபவஸுகம்.

மோக்ஷமாவது — ஆத்மானுபவ பகவதனுபவங்கள். இவற்றில் காமமோக்ஷங்களிரண்டும் ஸ்வயம் புருஷார்த்தமாயிருக்கும்.

3. ஸாதனம்:—ஸாத்யப்பொருளை யுறுதிப்படுத்தும் தாக்ஷி.

4. a. ப்ரக்ருதி—பகுதி.

 b. ப்ரத்யயம்—விகுதி.

 c. சந்தஸ்—யாப்பியல்.

5. பூர்வபக்ஷம்—பிரதிவாதம்; பிரதிகக்ஷியாய் மாறுபடக் கூறுகை.

6. ஆசாரம்—சௌச ஸ்நாநாதி.

வ்யவஹாரம்—தாயபாகாதி விவாத நிர்ணயம்.

ப்ராயச்சித்தம்—பாபசோதகசாந்த்ராயணாதிகள்.

7. அஸ்த்ரம்—ஆயுதம் (கைவிடு படை)

8. சஸ்த்ரம்—பாணம் (கைவிடாப்படை)

9. ப்ரதாநமான வேதாந்தம்—முக்யமான வேதத்தினுத்தரபாகமான உபநிஷதங்கள்.

## ஐந்தாம் விண்ணப்பம்.

பா— "ஸகலாத்மக! ஸகல ஜகத்வ்யாபாரமும் உன்னுடையதே என்று ஸகல வேதமும் முறையிடுவது (சாற்றுவது) உன்னைப் பற்றியே" என்று அந்த ஸுகலன் (நற்கலை வல்லோன்) யதுசைலபதிக்கு விண்ணப்பம் செய்தான்,

ஸகல வேதவேத்யா! வேதங்கள்— பூர்வபாகத்தில் யக்ஞாதி ஸத்கர்மங்களை முழுதும் செய்யும் ஒழுங்கையும் அவைகளினால் வரும் பலத்தையும் சொல்லும். உத்தர பாகத்தில் ஸம்ஸாரத்தை இகழ்ந்து ஜீவஸ்வரூபத்தையும் [1] பரப்ரம்மஸ்வரூபத்தையும் நிரூபித்து, மோக்ஷோபாயத்தை விதித்து மோக்ஷாநந்தத்தையும் புகழ்கின்றன. இப்படி அநேக விதமாயிருக்கும் வேதமெல்லாம் உன்னையே புகழ்கிறதென்று பெரியோர் சொல்லுவர். அந்த நிலைமையை ஆராய்கையில், உலகத்தில் கட்டியக்காரர் அரசனைப் புகழும் போது நாடுநகரத்தார் அரசனுணையைக் கடைபிடித்து நடக்கும் வகையையும், அதற்கு மனமுவந்து அரசன் அவர்கட்குத் தருந்தனைக் கொடுக்கும் வகையையும், பிரஜைகள் நிலைமையையும், அரசன் நிலைமையையும், அரசன் ஸந்நிதானத்தை அடையும் வழியையும், ஸந்நிதியிலிருப்போர் ஸுகத்தையும், வருணித்ததில் அரசனையே புகழுவரென்பர். இப்படி வர்ணாச்ரமத்தோரென்கிற உன்னுடைய நாடுநகரத்தார் பண்ணும் யஜ்ஞாதி கர்மங்களென்கிற உன் ஆஜ்ஞா கைங்கர்யமும், அதற்கு வச்யப்பட்டு நீ கொடுக்கும் இந்த லோகத்திலுண்டான போகங்களையும் பாரலௌகிக பலமென்கிற உம்பையும், ஜீவாத்மரென்னும் உன் கைங்கர்ய பரர்கள் நிலைமையும், பரப்ரம்ஹமெனப்படும் உன் நிலைமையையும், மோக்ஷோபாயமென்னும் உன் ஸந்நிதியை அடையத்

தக்க நடத்தைதயையும், மோக்ஷானந்தமெனப்படும் உன் ஸந்நிதியிலிருப்பவர் ஸுகத்தையும், நிரூபணம் செய்வதி ஞல் இந்த வேதங்களெல்லாம் உன்னையே புகழ்கின்றன வென்பது திண்ணம். இந்த அர்த்தத்தைச் சித்தத்தில் வைத்தே :—

"வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" என்று கீதை யில் சொன்னது.

இப்படி வேதவேத்யனெனப்படும் உன் அதிசயத் தையே ஸகல ஸ்ம்ருதிதிஹாஸபுராணாதிகளும் வருணிக் கின்றன. வருணித்தும் முடிவைக் காணவில்லையென்றால், அநேக மனுஷ்யர்கள் தங்கள் முயற்சியினால் உன் நிலை மையை அறிந்து துதித்துப்பாடிக்கடைக்காண்பாரென்பது (ஈடேறுவரென்பது) இச்சை மாத்ரமே. ஆகையால் நீயே தயைசெய்து உன் ஸ்வரூபத்தை அறிவித்து, என்னை உன் கைங்கர்யபரனென்று இடு, இடு, அநந்யஜனஸுலபா ! ஸ்ரீயது சைலவல்லபா !

---

குறிப்புகள்

1. ஜீவஸ்வரூபம்— "சென்று சென்று பரம்பரமாய்" என்கிறபடியே தேஹேந்த்ரியமன : ப்ராணபுத்திவிலக்ஷண மாய், அஜடமாய், ஆநந்தரூபமாய், நித்யமாய், அணுவாய், அவ்யக்தமாய், அசிந்த்யமாய், நிரவயவமாய், நிர்விகாரமாய், ஜ்ஞானாச்ரயமாய், ஈச்வரனுக்கு நியாம்யமாய், தார்யமாய், சேஷமாயிருக்கும்.

# ஆறும் விண்ணப்பம்.

பா— "பலவிதமாய் (பரஸ்பரவிரோதமாய்) தோற்றும் வேத வசனங்கள், உபதேசத்தினால் பரஸ்பர விரோதமில்லாமலாகும்," என்று கமலநாபன் திருவடியில் வணங்கி அரசர் தலைவன் விண்ணப்பம் செய்தான்.

அற்புத சரிதா! வேதங்கள், உன் ஸ்வரூப ரூப குண விபவங்களைப் பலவிடங்களில் பலபல வகையாய்ச்சொல்லி அறிவிக்கும். ஆசார்யன் மூலமாய்க் கேட்கிறவர்கட்கு இந்த அர்த்தம் ஸுவ்யக்தமாய் (தெளிவாய்) தெரியும். தங்கள் புத்தி பலத்தினால் ஊகிக்குமவர்கட்கு பரஸ்பர விரோதமாய் (ஒன்றுக்கொன்று விரோதமாய்) த்தோன்றும். அதெப்படியெனில் :—

உன்னை ஸகுணனென்றும், நிர்குணனென்றும், பெரிதுக்கும் பெரியவனென்றும், சிறியதின் சிறியவனென்றும், உருவுடையவனென்றும், உருவு இல்லானெனவும், அவாங்மனஸகோசரனென்றும், வேதவேத்யனென்றும், பிறப்பு இறப்பு இல்லாதவனென்றும், மத்ஸ்யாதி ரூபங்களில் பிறந்தவனென்றும், கூறுதலால் மந்தமதிகட்கு விரோதம் தோன்றி நிச்சயம் பிறக்காது, பெரியோர் உபதேசத்தினின்று அறிகிறவர்கட்கு இந்த விரோதம் எப்பொழுதும் தோன்றாது.

ஸகுணனெனில் — வாத்ஸல்யாதி குணங்களுள்ளவனென்றும், நிர்குணனென்றால்—ராஜஸதாமஸாதிகளில்லாதவனென்றும் தெரியவருவதால், ஸத்குணங்களெல்லாம் இருக்கின்றன, துர்குணங்களொன்றுமில்லையெனத் தெரிய வரும்.

பெரிதுக்கும் பெரியவனெனில் — பதினன்கு லோகங்களையும் தன் வயிற்றினுட்கொண்டவனென்றும்; சிறியதுக்கும் சிறியவனென்னில்—சிறியதான ஜீவாத்மாவுக்குள் அந்தர்யாமியாயிருப்பனென்றும், தெரியவருவதால் ஸகலபதார்த்தங்களின் உள்ளும் புறமும் வ்யாபித்திருப்பனென்ற நிச்சயம் உண்டாகும்.

ஸாகாரனெனில்—அப்ராக்ருத சரீரமுள்ளவ[1] னென்றும்; நிராகாரனெனில்—ஸகலஹேயாஸ்பதமான ப்ராக்ருத சரீரமில்லாதவனென்றும் தெரியவருவதால், தன் ஸ்வரூபத்திற்கு அநுகுணமாய் தனக்கிச்சாநுகுணமாயிருக்கிற திவ்ய மங்கள விக்ரகங்கள் உள்ளவனென்றும் வ்யக்தமாகும்.

அவாங்மனஸகோசரனெனில்—ஸ்வரூபமும், விக்ரஹமும், குணங்களும், ஐச்வர்யமும் இவ்வளவு என்று அளவிட்டு சொல்லவும் அறியவும் ஆகாதவனென்கிறது.

வேதவேத்யனெனில்—ச்ரிய: பதியும், அகிலஹேயப்ரத்யநீகனும், ஜகத்காரணனும், ஸர்வாந்தர்யாமியும்[2] மோட்சப்ரதனும், என்கிற இவை முதலான மகிமைகளும் வேதத்தில் தெரியவருமென்று காணுதலால், தானறியவேண்டுவதெல்லாமறிந்து மற்றும் மஹிமைகள் உண்டென்று இருக்க வேண்டுமென்பது உறுதிப்பட்டது.

பிறப்பு இறப்பு இல்லாதவனெனில் — கர்மாதீனமான இவை இல்லையென்றும்; மத்ஸ்யாதிரூபத்தில் பிறந்தானெனில்—துஷ்ட நிக்ரஹ சிஷ்டபரிபாலன தர்மஸ்தாபனார்த்தமாய்[2] தனதிச்சையால் மனுஷ்யர் முதலான உருவத்தில் தோற்றுவனென்றும் தெரியவருவதால், கர்மத்திற்கு அதீனமில்லாமல் லோகாநுக்ரகார்த்தமென்று[3] விளக்கமாயிற்று.

இப்படி, விரோதமில்லாமல் ஸகல வேதாந்தங்களையும் ஒன்றுபடுத்தி அறிந்தவர் உன்னை ஸர்வாச்சர்யமயனென்பர். உன்னுடைய நிலைமையை நிரூபணம் செய்ய நான் எவ்வளவு? என்னை உன் நிர்வ்யாஜமான அருளமுதக் கடலலைகளில் மிதப்பித்து சீராட்டவும், சீராட்டவும், அநந்பஜனஸுலபா! ஸ்ரீயது சைலவல்லபா!

---

## குறிப்புகள்

1. அப்ராக்ருத சரீரம்—மாயையென்கிற மூலப்ரக்ருதியின் பரிணாமமான ப்ருதிவ்யாதி பஞ்ச பூதங்களினால் உண்டாகாத சரீரம்.

2. துஷ்ட நிக்ரஹ சிஷ்டபரிபாலன, தர்மஸம்ஸ்தாபனார்த்தம்—தன்னுடைய அநுபவமொழிய க்ஷணகாலமும் செல்லாதே தன்னைக் காணவேணுமென்று ஆசைப்பட்டிருக்கும் ஸாதுஜனங்களை தன்னுடைய ரூபசேஷ்டிதாவலோகனாலாபாநதானமுகேந ரக்ஷிக்கையும், தத்துவவிரோதிகளான துஷ்க்ருத்துக்களை நசிப்பிக்கையும், தன்னுடைய ஆராதனரூபமாய் க்ஷீணமாய் கிடக்கிற வைதிக தர்மத்தை ஆவேத்யனை தன் ஸ்வரூபத்தை தர்சிப்பித்து ஸ்தாபிக்கையுமாகிற இம்மூன்றுமே பலமென்கை.

3. லோகானுக்ரஹார்த்தம் — அநுக்ரஹமாவது — பிறருடைய துக்கத்தைப்போக்கி இஷ்டத்தை அளிக்கும் பொருட்டுப் பெரியோன் சிறியோன் இடத்தில் செய்கிற அன்பு (கிருபை).

---

## ஏழாம் விண்ணப்பம்.

பா.— "கேளாய்! உன்னுடலாயிருக்கு மென்பதனுல் பிரபஞ்சமெல்லாம் உண்மையானது" என்று யதுசைலநாதன் திருவடிகளில் ஸத்தியப்பிரியன் வசப்பட்டு பக்தியுடன் விண்ணப்பம் ஸமர்ப்பித்தான்.

ஸமஸ்த சிதசித்வஸ்து சரீரகா! பிரபஞ்சமெல்லாம் உனக்கு உடலாயும், நீ இந்த ஜகத்திற்கு பரமாத்மனுயும் இருப்பதனுல், பிரபஞ்சமெல்லாம் நீயொருவனன்றி வேறில்லையென்று வேதசாஸ்திரங்கள் சொல்லும். அதன் உண்மையை அறியாமல் சிலர் மயங்கி, ஜகத்திற்கும் உனக்கும் ஸ்வரூபபேதமில்லை என்று சொல்லுவார். அவர்கள் சொல்லும் வசனங்களெல்லாம் யுக்திக்கு விரோதமாக இருக்குமவை. அதெங்ஙனேயெனில் :— லோகத்தில் வஸ்துரூபமிரண்டாயிருந்து, அவ்விரண்டின் அநேகாந குணங்களும் ஒன்றுய் இருந்தால், அந்த ஒரே வஸ்துவைக்கொண்டு இதற்கும் இதற்கும் பேதமில்லையென்று புத்திமான்கள் சொல்லுவர்.

ப்ரம்ஹத்திற்கும் ப்ரபஞ்சத்திற்கும் பேதமில்லையென்பவன், இந்த ப்ரபஞ்சமே ப்ரம்ஹம் என்பதனுல் வேறு ப்ரம்ஹமில்லை என்ற சூன்யவாதியாவன்; ப்ரம்ஹமே ப்ரபஞ்சம் என்று சொன்னுல் ப்ரம்ஹம் ஒன்றன்றி வேறொன்றுமில்லை என்று சொல்லும் தானும், தன் வசனமும், தனக்குபதேசித்த குருவும், அந்த குரு அத்யயனம் செய்த வேதாந்தமும் இல்லையென்பதால் நாஸ்திகவாதியாவான்.

இப்படிக்கு சுத்தாத்வைதம் சாஸ்திரவிருத்தமாயிருந்தாலும் உன் கடாக்ஷத்திற்குப் பாத்திரமாகாத மனுஷ்யர்

இந்த பக்ஷத்தை அங்கீகரித்து, உன்னுடைய ஜ்ஞான, பல, ஐச்வர்ய, வீர்ய, சக்தி, தேஜஸ், ஸௌசீல்ய, வாத்ஸல்ய, மார்தவ, ஆர்ஜவ, ஸௌஹார்த, ஸாம்ய, காருண்ய, மாதுர்ய, காம்பீர்ய, ஔதார்ய, சாதுர்ய, ஸ்தைர்ய, தைர்ய, பராக்ரம, ஸத்யகாம, ஸத்யஸங்கல்ப, க்ருதித்வ, க்ருதஜ்ஞதா, முதலான எண்ணரிய கல்யாணகுணங்களும் திவ்ய மங்களவிக்ரஹமும், திவ்யபூஷணங்களும், திவ்யாயுதங்களும், திவ்யமஹிஷீவர்க்கமும, நித்ய முக்தரும், ஸ்ரீவைகுண்டமும், இவைகளொன்று மில்லையென்றும், மற்றும் உன் லீலோபகரணமான ப்ரம்மாண்டமும், மற்றும் அதனுள்ளிருக்கும் பதினன்கு லோகங்களும், பிரமன் ருத்ரன் முதலான தேவர்களும், ஸப்தத்வீபங்களும், பர்வதங்களும், நதிகளும், தேசங்களும் கிராமங்களும், இல்லாத வேதாந்தத்திலிருந்தே இவை யெல்லாவற்றையு மறிந்தோமென்றும், இம்முறையில் உன்னுடைய நித்ய விபூதியையும் (ஸ்ரீவைகுண்டம்) லீலாவிபூதியையும் (ப்ரம்மாண்டம்) இல்லையென்று அபலாபனம் செய்வர்.

அவர்களில் நீ நிலைத்திருப்பது எப்படியோ! அது ஒரு புறமிருக்கட்டும். உன்னையே உயிர்நிலையாய் நம்பி உன்னுடைய கடாக்ஷத்தைப்பெற்ற உத்தமர் ஸகல வேத சாஸ்திரங்களுக்கும் ஏற்றதாயும் யுக்தியுக்தமாயும் உள்ள விசிஷ்டாத்வைத சாஸ்திரத்தை அங்கீகரித்திருப்பர். அதெங்ஙனேயெனில்:— ஒருவன் உடலில் பிருத்வீ முதலான தத்துவங்கள் இருபத்துநான்கும், ஜீவாத்மனும், அந்தர்யாமியான நீயும் சேர்ந்து, இருபத்தாறு தத்துவங்களிருந்தாலும், மனுஷ்யன் ஒருவன் இருக்குப்படி, இந்த சேதன சேதனங்களனைத்தும், வேறாயிருந்தாலும், உன்னுடைய சரீரமாகிறதனால் நீயொருவனே யெனபது யுக்தம்

இந்த தத்துவ ஜ்ஞானம் என் மனதில் நிலைபெறும்படி நீ க்ருபை செய்தருளவேணும், க்ருபை செய்தருள வேணும், அநந்யஜன ஸுலபா! ஸ்ரீயது சைலவல்லபா!

---

## எட்டாம் விண்ணப்பம்.

பா— "கனவில் பார்க்கும் வஸ்துக்களெல்லாம் நீ ஸ்ருஷ்டித்ததனுலேயே, நிச்சயம்" என்று ஒப்புரவாக்கி மலைநாட்டினரை வென்றவன் அஸுராரி திருவடியில் விண்ணப்பம் செய்தான்.

அகடித கடனுஸமர்த்தா[1]! மானிடர்க்கு ஜாகர ஸ்வப்ந ஸுஷுப்தியென்று மூன்று அவஸ்தைகளுண்டு. அவைகளில் ஸுஷுப்தியென்கிறது நித்திரை, ஸ்வப்னமென்கிறது கனு, ஜாகரமென்பது விழிப்பு. நித்திரையில், ஜீவாத்மன் பரமாத்மாவான உன்னுள் அடங்கி ஜ்ஞானேந்திரிய[2] வ்யாபாரம் அழிந்திருப்பதால், புறம்பும் உள்ளும் தன்னறிவில்லாமலிருக்கும். விழிப்பிலும் கனவிலும் தன்னறிவு உண்டாயிருக்கும். ஜாகரத்தில் காண்கிற வஸ்துக்களை நீ ஸ்ருஷ்டிக்ரமத்தில் உண்டு பண்ணுவதால் இந்த வஸ்து இதிலிருந்து பிறக்கும், இதற்கு இந்தப் பெயர், இந்த உருவம், இந்த குணம், இதனுலாகும் கார்யமிது, இந்த வஸ்து இவ்வளவு காலம் இருக்குமென்று அளவுபட்டிருக்கும். இருக்கும் காலத்தில் எல்லாருக்கும் தெரிய வரும். கனவில் காணும் வஸ்துக்களை நீ அந்தந்த காலத்தில் ஸங்கல்பமாத்ரத்திலிருந்தே உண்டுபண்ணுவதால், இந்த வஸ்து இதிலிருந்து பிறக்குமென்றும், இதற்கு இதுவே உருவம், இதுவே குணம், இதுவே கார்யம் என்றிவை முதலான பரிமாண மொன்றுமில்லாமல், விசித்ரமாய், உன்னுடைய ஸங்கல்பமிருந்தபடி யிருக்கும். அந்த காலத்தில் கனவைக் காணுமொருவனுக்குத் தோன்றுமன்றி வேறு ஒருவருக்கும் தோன்றமாட்டாது. இப்படி விழிப்பில் காணப்படும் வஸ்து எல்லோருக்கும் காணப்பட்டும், ஸ்திரமாயும் இருக்கும். கனவில் காணும் வஸ்து ஒருவனுக்குத்

தோன்றி விழித்தவுடனே மறைவதனால் அநித்யமா யிருக்கும். உலகநடை யிப்படி இருந்தாலும், நீ சிலரிடத் தில் தயைசெய்து இவ்வரம்பை மாறிக்காண்பிப்பாய். அதெப்படியெனில், முன்பு கோகுலத்தில் பலபத்ரன் கோள் வார்த்தையைக்கேட்டு 'மண்ணைச் சாப்பிடாதிரு' என்று பயப்படுத்தின யசோதைக்கு உன் சிறியச்செவ்வாய் திறந்து பதினாலுலகங்களையும் யாருக்கும் தெரியாதபடி காண்பித் தாய். அப்படியே இரண்டு ஸைன்யத்துக்கும் நடுவில் அர் ஜுனனுக்கு யாருமறியாதபடி விச்வரூபத்தைக் காண்பித் தாய். பின்னும், ஸைந்தவனைக் கொல்வித்து அர்ஜுனனை ரக்ஷிக்கவேணுமென்ற எண்ணத்துடன் குருக்ஷேத்ரத்தில் பகலில் இருட்டையுண்டுபண்ணினாய். மேலும், கங்கையில் முழுகின ஸுசரித[3] னென்ற அந்தணனைக் கல்யாணி தீர்த் தத்தின் நடுவே எழுப்பினாய். இப்படி பரோக்ஷமல்லாமல் ஸாக்ஷாத்காரமாய் எனக்குக் கனவில் நீ க்ருபைசெய்த நந்தகமென்றும் பெயர்பெற்ற உத்தமமான ஒரு கத்தியைக் கனவு பதார்த்தத்தைப்போல, அந்த காலத்தில் மாத்திரம் அனுபவிக்கத் தக்கதல்லாமல் நித்யமெனப்பட்டு, விழிப்புட னிருக்கையில் எல்லோருக்கும் பார்வையில் பட்டு, நீ ஈந்த மஹிமையினால் ஒரே அடியில் விழுந்து முற்றுகைபோட்ட நாலுதிசை பகைவர் அனைவரையும் வெட்டிவீழ்த்தி வெற்றி யைக்கொண்ட என்னை, உன்னுடைய கைங்கர்யத்தில் அர்ஹனாம்படி ஆட்கொண்டாய். உன்னுடைய திவ்யாத்புத குணஸாகரத்தில் வேதங்களும், பிரமன் முதலானவர்களும் ஒரு துளிக்கும் ஸமமாகமாட்டார். நான் எவ்வளவு? உன் மகிமைக் கடலை வர்ணிப்பதென்று முயற்சிசெய்த என் ஸாஹஸத்தைப் பொறுத்து உன் அடியனென்று ஆநந்தப் படுத்துவது, ஆநந்தப்படுத்துவது, அநந்யஜநஸுலபா! ஸ்ரீயது சைலவல்லபா !

## குறிப்புகள்

1. அகடிதகடனாஸாமர்த்யம் — சேராத வஸ்துக்களைச் சேர்ப்பிக்கத் தகுந்தவல்லமை.

2. ஜ்ஞாநேந்திரியங்கள்—மெய், வாய், கண், மூக்கு, செவி.

3. ஸுசரிதன் — இவன் வரலாற்றை யாதவகிரி மாஹாத்ம்யத்தில் காணலாம்.

---

## ஒன்பதாம் விண்ணப்பம்

பா—"நியமித்த கர்மகதியை அநுஸரித்தே ஸ்ருஷ்டி செய்யும் நீ, ஸர்வஸமனென்பது திண்ணம்." என்று சௌரியிடம் லோகைகவீரன் விண்ணப்பத்தை மேலும் சொன்னான்.

ஸகலலோகநியாமக ! நீ இந்த ஸம்ஸாரத்தில் சிலருக்குப் பட்டாபிஷேகாதி ஸுகத்தையும், சிலருக்குச் சிரச்சேதனாதி துக்கத்தையும், உண்டுபண்ணுவதனால் விஷமனென்றும், கர்மாநுகுணமான பலனைக் கொடுப்பதனால் கர்மத்திற்குப் பாரதந்த்ரனென்றும், பாபிகள் படும் துக்கத்தைப்போக்கடிக்காமல் பார்த்துக்கொண்டிருப்பதால் நிர்த்தயனென்றும், சிற்றறிவுள்ளவர்களுக்குத் தோன்றும். இதன் நிலைமையை விசாரஞ்செய்ய, நீ ஆக்ஞை செய்யுமவனாதலால் உன் ப்ரஜைகளெனப்படும் ஜீவன்களெல்லாரிடத்திலும், ஸமபுத்தியுடன், எல்லாரும் உன்னுடைய மனம் உவந்தபடி கைங்கர்யத்தைச் செய்து வாழவேணுமென்றெண்ணி, இன்னின்ன முறையில் நடப்பவர்களுக்கு மோக்ஷமென்றும், இப்பிப்படி நடப்பவர்களுக்கு இஹபரஸௌக்யமென்றும், அறுதியிட்டு, அந்த எல்லையில் யார் யார் எந்த வகையில் நடப்பரோ, அவர்கட்கு அந்த அறுதியிட்ட பலனைத் தவறாமல் கொடுக்கிறதினால் நீ ஸர்வஸமன். உனக்கு ஒருவரிடத்திலும் வைஷம்யமில்லை. இப்படி அவரவர் கர்மாநுகுணமாய் பலன்களைக்கொடுத்தும், நீ ஸ்வதந்த்ரனன்றி பாரதந்த்ரனன்று. பாபிகளுக்குப் பாபாநுகுணமான பலனைக் கொடுத்துக்கொண்டும், அஜாமிளன் முதலான சிலரிடத்தில் அளவுகடந்த தயையைக் காட்டினதால் பரமதயாளுவென்னப்படுவாய். அது எப்படி

யென்றால்—உலகத்தில் தார்மிகனாயிருக்கும் அரசனொரு வன் தன் நாட்டில் இப்படி நடப்பவரை மன்னிப்பேன், இப்படி நடப்பவர்களைத் தண்டிப்பேன் என்று முன்னமே வரையறுத்து, அந்தக் கட்டுப்பாட்டின்படி, இவரிவரென்னாமல் நிக்ரஹாநுக்ரஹங்களை நடத்தினால், பக்ஷபாதமின்றி ஸர்வஸமனென்பர். தான் வரையறுத்த எல்லையை விடாமல் நடப்பிப்பதனால் அவன் ஸ்வதந்த்ரனென்பர். தவறியவர்களைத் தண்டனை செய்யுமிடையில் எங்கேனுமொருவனிடத்தில் குற்றமிருந்தும் மன்னிப்பதால் தயாளுவென்பர். ஆக நீ, உன் ஆஜ்ஞாரூபமான கர்மத்திற்கு அநுகுணமாய்ப் பலனைக் கொடுப்பதனால் ஸர்வஸமனும், அந்த எல்லையைத் தப்பாமல் நடத்துவதனால் ஸ்வதந்த்ரனும், சிலர் குற்றத்தை மன்னிப்பதனால் தயாளுவென்றும், பெரியோர்களிடமிருந்து கேட்டு, உன்னை உயிர்நிலையாகக்கொண்டேன். என்னுடைய குற்றத்தை க்ஷமித்துக், கருணைகூர்வது, கருணைகூர்வது, அநந்ய ஜனஸாலப ! ஸ்ரீயது சைலவல்லபா !

---

## பத்தாம் விண்ணப்பம்.

பா——"நானாவிதமான ஜகத்திற்கு நீயே மூன்று வகைக் காரணங்களும்," என்று முராவைரியின் திருவடியில் விருதாளிகளின் தலைவன் பரமாநந்தத்தோடு விண்ணப்பம் செய்தான்.

ஸகலஜகதேககாரணா !! கார்யத்தை உண்டுபண்ணும் வஸ்து காரணமெனப்படும். அது உபாதான காரணமென்றும், நிமித்தகாரணமென்றும், ஸஹகாரிகாரணமென்றும், மூவகைப்படும். புதியதொரு காரணத்தைப்பெற்றுத் தானே கார்யமெனப்படும் வஸ்து உபாதானகாரணம்; இந்த உபாதானகாரணத்திலிருந்து கார்யத்தை யுண்டுபண்ணும் வகையை அறிந்து உண்டுபண்ணுகிற கர்த்தா நிமித்த காரணம்; இந்த கர்த்தா கார்யத்தை உண்டுபண்ணுவதற்கு வேண்டிய உபகரணங்கள் ஸஹகாரிகாரணம். இவையெவை யென்னில், ஸ்வர்ணமயமான கடகமகுடாதி கார்யத்திற்கு ஸ்வர்ணம் உபாதானகாரணம், பொன்வினைஞன் நிமித்தகாரணம். சுத்தி, அடைகல், இடுக்கி, நீர், நெருப்பு முதலியவை ஸஹகாரிகாரணம், அன்றியும் மண்மயமான சட்டு, ஆல் முதலியவற்றிற்கு மண்பிண்டம் உபாதான காரணம். குயவன் நிமித்தகாரணம். சக்ரம் முதலியவை ஸஹகாரி காரணம்.

இப்படி உலகத்தில் பிறக்கும் கார்யமெல்லாவற்றிற்கும் மூவகைப்பட்ட காரணங்களும் வெவ்வேறாயிருக்கும். இந்த லோக மர்யாதையை மீறி, ஜகத்தென்ற கார்யத்திற்கு நீ யொருவனே மூவகைக் காரணமாயிருப்பாய். அதெங்ஙனேயெனில் :—மஹாப்ரளயத்தில் பஞ்சமஹா பூதங்களும், பஞ்சதந்மாத்ரைகளும், ஏகாதசேந்திரியங்க

ளும், அஹங்காரதத்துவமும், மஹத் தத்துவமும் சேர்ந்து இருபத்துமூன்று தத்துவங்களும் ப்ரக்ருதியுடன் அடங்கி, மற்றும் ப்ரக்ருதியும் ஜீவனென்னும் இரண்டு தத்துவங்களும், பெயரும், உருவமும், தனித்தனியாய்த் தெரியாதபடி உன்னுள் அடங்கி உன் உடலாயிருப்பதனால், நீயொருவனே இருப்பாய். அந்த வேளையில் நீயே மூவகைக் காரணமாய் ஜகத்தை யுண்டுபண்ணுவதால் ஜகதேககாரணனென்பது திண்ணம். இப்படி ஸூக்ஷ்ம ப்ரக்ருதி ஜீவசரீரகனான நீ, உபாதான காரணமானதனால், புதியதொரு உருவத்தையடைகிறதென்கிற பரிணாமதோஷம்[2] ப்ரக்ருதி மாத்திரத்திற்கன்றி, இத்திவ்யாத்மஸ்வரூபத்திற்கு அன்றென்று, ஸகலவேதாந்தங்களும் உன்னுடைய மகிமையைப் புகழ்ந்து ஆச்சர்யப்படுகின்றன. இந்த ஜகதுத்பத்தி ஸ்திதி[3]கள் என்னும் உன் திவ்யாத்புத லீலைகளை வர்ணிக்க நானெவ்வளவு? உன்னவரெனப்படும் பெரியோர் பலதடவை உபதேசிக்க, ஓரோர் வார்த்தையைக் கற்றுச்சொல்லும் கிளிக்குஞ்சு போன்ற என் சொல்லுக்கு சித்தத்தில் ஸந்தோஷப்படவும், ஸந்தோஷப்படவும், அநந்யஜன ஸுலபா! ஸ்ரீயதுசைலவல்லபா!

---

## குறிப்புகள்

1. ஸகலஜகதேககாரணா—"ஸகலஜகத்துக்கும் காரணபூதன், ஸமஷ்டி வ்யஷ்டிரூப ஸமஸ்தகார்யங்களுக்கும் காரணபூதன். பரமாணுவாவது, ப்ரதாநமாவது, சேதனனாவது, காரணமாகமாட்டா.

ஸங்கல்பவிசிஷ்டனாய்க்கொண்டு நிமித்தகாரணனாயும், நாமரூப விபாகானர்ஹமாய்ப்படி தன்னுடனே கூடிக்கிடக்கிற

ஸூக்ஷ்ம சிதசித்விசிஷ்டனுய்க்கொண்டு உபாதாந காரண மாயும், ஜ்ஞாந சக்த்யாதி விசிஷ்டனுய்க்கொண்டு ஸஹகாரி காரணமாயிருக்கும். ஜகத்ரூபகார்யோத்பத்தியில் ஈச்வர னே த்ரிவிதகாரணனுயிருக்கும்."

2. பரிணுமதோஷம்—வேறுபாடு அடைவதால் உண் டாகும் தோஷம்.

3. ஜகதுத்பத்திஸ்திதி — உலகைப் படைப்பது, காப்பது.

---

## பதினொன்றும் விண்ணப்பம்.

பா— "ஆராயுங்கால், புத்தி, சரீரம், இவைகளி லிருந்து ஜீவன் விலக்ஷணனென்னும் இந்த நிலைமை உண்மை," என்று சௌரிக்குப் போர்வீரனென்கிற விரு துள்ளவன் பக்தியுடன் விண்ணப்பம் செய்தான்.

பரமாத்மா[1] ! நீ ஸகலஜீவாத்மவர்க்கத்திற்கும் உயர்ந் தவனாதலால் உன்னை பரமாத்மனென்பது. ஜீவாத்ம ஸ்வ ரூபத்தை விசாரம் செய்யுமளவில் சரீரமே ஜீவாத்மனென் றும், ஸகலசரீரத்திலுமிருக்கும் ஜீவாத்மனொருவனே யென் றும், ஸ்வதந்த்ரனென்றும் சொல்லுவர். இந்தப் பக்ஷங்க ளெல்லாம் யுக்திவிருத்தமாயும், சாஸ்திரவிருத்தமாயுமிருக்கு மவை. அதெங்ஙனேயெனில் :— சரீரமே ஜீவாத்மா வாகில் ம்ருதசரீரம் அச்சு அழியாமலிருந்தும் ஜீவன் போயிற்றென்னும் உலகவார்த்தை கூடாது. சக்ஷுராதி இந்திரியங்களே ஜீவாத்மாவாகில், குருடர் செவிடரிடத்தில் ஜீவாத்மனில்லையென்று சொல்லவேணுமாகும். மனஸ்ஸும் ப்ராணவாயுவும் ஜடமாதலால்[2] ஜீவாத்மனல்ல. ஜ்ஞானமே ஜீவாத்மனாகில் தான் ஜ்ஞானமுள்ளவனெனக்கூடாது. மற்றும் தான் ஜ்ஞானமென்று சொல்லவேண்டும். ஆகை யால் ஜீவாத்மா சரீரபாஹ்யேந்திரியங்களிலிருந்தும்[3] மனஸ், ப்ராணன், ஜ்ஞானமிவைகளிலிருந்தும் வேறாய் ஸ்வப்ரகாசமாயிருக்கும்.[4] ஸகலசரீரங்களிலும் ஜீவாத்ம னொருவனேயாகில் ஒருவன் ச்ரேயஸ்ஸுக்கு மற்றொருவன் பொறாமைப்படுவதும், ஒருவனுக்கு இன்னொருவன் பகை யாவதும், ஒருவனை மற்றொருவன் கொல்லுவதும் கூடாது. எல்லோருடைய அந்தரங்கத்தையும், எல்லோரும் அறிய வேணுமாகும். மேலும் ஒருவனுக்கு வேதாந்த ஜ்ஞானம்

பிறந்த மாத்திரத்தில் எல்லோருக்கும் முக்தியுண்டாவதால் பலரும் வேதாந்தச்ரவணம் செய்வது வ்யர்த்தமாகும். ஜீவாத்மன் ஸ்வதந்த்ரனாகில் துக்கமயமான ஸம்ஸாரத்தை அங்கீகரிக்கமாட்டான். இந்த காரணங்களுடன் கூடின சாஸ்திர வசனங்களிலிருந்து ஜீவாத்மர் பலராய் உன் அடிமைகளாயிருப்பர். நீ, இந்த ஜீவாத்மரனைவருக்கும் தலைவனாய் பரமாத்மனெனப்படுவாய். இப்படி நீ உடையவனும் நாங்கள் உடைமையுமென்னும் ஸ்வ-ஸ்வாமி-பாவ-ஸம்பந்தத்தை இதுவரையுமறியாமல் ஸத்தொழிந்த எனக்கு, நிர்வ்யாஜதயை புரிந்து இப்பொழுது அறிவித்து ஸ்வரூபத்தை உண்டு பண்ணின பிறகு, இன்னும் ச்ரேயஸ்பரம்பரைகளை வளர்ப்பது, வளர்ப்பது, அநந்ய ஜனஸுலபா! ஸ்ரீயது சைல வல்லபா!

---

## குறிப்புகள்

1. பரமாத்மா — ஸ்ரீமந்நாராயணனே ஸர்வஸ்மாத்பரன்.

ஆத்மாவினுடைய தேஹாதி விலக்ஷணத்வம்—"ஆத்மா, தேஹாதிகளிவற்றில் வேறுபட்டிருப்பானொருவன்."

2. ஜடம்—ஜடமாவது ஸ்வயம் ப்ரகாசமன்றிக்கே யிருக்கை.

3. பாஹ்யேந்திரியங்கள் — ஜ்ஞாந கர்ம ஸாதகங்களான பத்து இந்திரியங்கள்.

4. ஸ்வப்ரகாசம்— "தீபம் தீபாந்தர நிரபேக்ஷமாக ஸ்வவ்யவஹாரத்துக்கு ஹேதுவாகிற வோபாதி, ப்ரகாசாந்தர நிரபேக்ஷமாக ஸ்வவ்யவஹாரத்துக்கு ஹேதுவாகை."

## பன்னிரண்டாம் விண்ணப்பம்.

பா—"உன் இச்சைமாத்திரத்திலேயே முன்னெழுந்தது தத்துவஸ்ருஷ்டி" என்று யதுசைலபாலனிதியினுடைய திருவடித்தாமரை ஸன்னிதியில் அஷ்டாங்கிரஹம் செய்யுமவன் சொன்னான்.

பரதத்துவ ஸ்வரூபா! உன் அதீனமாய் உன் சரீரமென்றிருக்கும் தத்துவங்கள் ஜீவனென்றும், ப்ரக்ருதியென்றும் இரண்டாயிருக்கும். அவைகளில் ஜீவதத்துவம் உன் உடைமையாய் ஜ்ஞானாநந்தஸ்வரூபமாய்[1] நித்யமாய் இருக்கும்[2] ப்ரக்ருதி யென்பது தானொன்றும், தன்னிலிருந்து பிறந்த தத்துவங்கள் இருபத்துமூன்றும் சேர்ந்து இருபத்துநாலு தத்துவமாயிருக்கும். அதெங்ஙனேயெனில்:— மஹாப்ரளயத்தில் ப்ரக்ருதி உன்னுள் அடங்கியிருக்கும். அதனுள் ஸத்துவராஜஸ்தமஸ்ஸென்னும் மூன்று குணங்களும் ஸமமாக இருக்கும். இந்த ப்ரக்ருதிக்கு மாயை[3] என்றும், அவித்யையென்றும், ப்ரதானமென்றும் பெயராயிருக்கும். இந்த ப்ரக்ருதி கீழ்ப்புறத்திலும், எண்திசையிலும் வரம்பில்லாமல் வ்யாபித்து, மேலுக்கு வைகுண்டலோகம் வரையிலிருக்கும். இப்படி பூர்ணமாயிருக்கும் ப்ரக்ருதியினுடைய சிலவிடங்களில் ஸத்வராஜஸ்தமோகுணங்கள் ஏற்றமடைந்து மஹத் தத்துவம் பிறக்கும். இப்படி ஸமநிலை நீங்கிய மூன்றுகுணமுள்ள மஹத் தத்துவத்தின் ஓரோர் இடத்தில் ஒரு குணம் மிக்கு, மற்ற இரண்டு குணங்களையும் அடக்கி ஓங்கி நிற்கும். அவ்விடத்தில் ஸத்துவம் அதிகமானால் ஸாத்விகமென்றும், ரஜஸ்ஸு அதிகமானால் ராஜஸமென்றும், தமஸ்ஸு அதிகமானால் தாமஸமென்றும், மூன்றுவகை அஹங்கார தத்துவம் பிறக்கும். இதில்

ஸாத்விகாஹங்காரத்தினின்றும் சப்தத்தை அறியும் செவியும், ஸ்பர்சத்தை அறியும் மெய்யும், ரூபத்தையறியும் கண்ணும், ரஸத்தையறியும் நாவும், கந்தத்தையறியும் நாசியுமாக, ஜ்ஞானேந்திரியங்களைந்தும், மற்றும் பேசும் வாயும் குடிக்கும் கையும் நடக்குங் காலும் சரீரதர்பத்தை நடத்தும் பாயு குஹ்யேந்திரியங்களென்னும் கர்மேந்திரியங்களைந்தும், மற்றும் ஜ்ஞாநேந்திரிய கர்மேந்திரியமிரண்டிற்கும் ஸஹாயமான மனஸ்ஸு என்னும் அந்தரிந்திரியமொன்றும், ஆக பதினொன்று இந்திரியங்கள்.

தாமஸாஹங்காரத்தினின்றும் அவ்யக்தமான சப்த குணமுள்ள சப்ததந்மாத்ரம் பிறக்கும். இந்த சப்ததந்மாத்ரத்தினின்றே அவ்யக்தமான சப்தகுணமுள்ள ஆகாசம் பிறக்கும். இந்த ஆகாசத்துடன் கூடின சப்ததந்மாத்ரத்தினின்று அவ்யக்தமான ஸ்பர்சகுணமுள்ள ஸ்பர்சதந்மாத்ரம் பிறக்கும். இந்த ஸ்பர்சதந்மாத்ரத்தினின்றே அவ்யக்தமான ஸ்பர்சகுணமுள்ள வாயு பிறக்கும். இந்த வாயுவுடன் கூடின ஸ்பர்சதந்மாத்ரத்தினின்றே அவ்யக்தமான ரூபகுணமுள்ள ரூபதந்மாத்ரம் பிறக்கும். இந்த ரூபதந்மாத்ரத்திலிருந்தே அவ்யக்தமான ரூபகுணமுள்ள தேஜஸ்ஸு பிறக்கும். இந்த தேஜஸ்ஸுடன் கூடின ரூபதந்மாத்ரத்தினின்றே அவ்யக்தமான ரஸகுணமுள்ள ரஸதந்மாத்ரம் பிறக்கும். இந்த ரஸதந்மாத்ரத்தினின்றே அவ்யக்தமான ரஸகுணமுள்ள ஜலம் பிறக்கும். இந்த ஜலத்துடன் கூடின ரஸதந்மாத்ரத்தினின்றே அவ்யக்தமான கந்தகுணமுள்ள கந்ததந்மாத்ரம் பிறக்கும். இந்த கந்ததந்மாத்ரத்தினின்றே அவ்யக்தமான கந்தகுணமுள்ள பிருதிவி பிறக்கும்.

ராஜஸாஹங்காரமென்பது ஸாத்விகாஹங்காரத்திலிருந்து ஏகாதசேந்திரியங்கள் பிறப்பதற்கும், தாமஸாஹங்

காரத்திலிருந்து பஞ்சதந்மாத்ரங்களும் பஞ்சபூதங்களும் பிறப்பதற்கும் ஸஹாயமாயிருக்கும். இப்படி ப்ரக்ருதி, மஹத், அஹங்காரங்களும், ஏகாதசேந்த்ரியங்களும், பஞ்ச தந்மாத்ரங்களும், பஞ்சபூதங்களும், என்று இருபத்துநாலு வகையான அசேதநப்ரக்ருதி தத்துவத்திற்கும், சேதனமான ஜீவதத்துவத்திற்கும் உயர்ந்தோனாகையால், நீயே பரதத்துவமென்று பெரியோரிடமிருந்து கேட்டு, உன்னையே மிக்க நம்பின, என்னை தயை என்னும் அம்ருதத்தில் நனைத்து, உன் குளிர்ந்த கடைக்கண் ஒளியை என்னுள் பொழிந்து, என்னுடைய ரஜஸ்தமோகுணமென்னும் அழுக்கைக் களைந்து, ஸத்வகுணத்தை வளர்ப்பது, வளர்ப்பது, அநந்யஜனஸுலபா! ஸ்ரீயது சைலவல்லபா!

---

## குறிப்புகள்

1. ஜ்ஞாநாநந்தஸ்வரூபமாய் — "ஜ்ஞானத்துக்கும் ஆநந்தத்துக்கும் இருப்பிடமாயிருக்கை. ஜ்ஞாநமாவது— ஸ்வஸத்தாமாத்ரத்தாலே ஸ்வாச்ரயத்தைப்பற்றி ஸ்வபரவ்யவஹாரத்துக்கு உடலாயிருப்பதொரு ஆத்மதர்மம். இதுக்கு ஆத்மா ஆச்ரயம்—." "ஆநந்த ரூபத்வமாவது ஸ்வத ஏவேஷ்டத்வம். அதாவது—ஸ்வபாவமே அநுகூலமாயிருக்கை."

2. நித்யமாயிருக்கும்—நித்யமாவது ஸர்வகாலவர்த்தித்வம். ஆத்மாவுக்குச் சொல்கிற ஜந்மமாவது தேஹஸம்பந்தம், மரணமாவது தேஹவியோகமென்கை.

3. மாயை:—மாயையென்பது விசித்ரஸ்ருஷ்டியைப் பண்ணுகையாலே, அதாவது ஒன்றுபோலன்றிக்கே விஸ்மயநீயங்களான ஆச்சர்யங்களான கார்யங்களை ஜநிப்பிக்கை.

அவித்யை — அவித்யையென்கிறது ஜ்ஞாநவிரோதியாகையாலே.

---

 

## பதின்மூன்றும் விண்ணப்பம்.

பா— "பல ப்ரும்ஹாண்டங்களை நீ நீர்க்குமிழிபோல் யெழுப்பிப்பாய்"—என்று பத்மநாபனின் ஸுகுமாரமான திருவடியில் போர்வீரன் ப்ரீதிவிசேஷத்துடன் நல்ல விண்ணப்பம் உரைத்தான்.

அநேககோடி ப்ரம்மாண்டநாயகா! நீ ஜீவன்களில் தயைகொண்டு அவர்களுக்குக் கரணகளேபராதிகளைக் கொடுக்கவெண்ணி அந்த சரீரத்திலிருந்து அவர்கள் கர்மங்களைச் செய்யவும், அந்தகர்மபலங்களை அனுபவிக்கவும் இடமான ப்ரம்மாண்டத்தை ஸ்ருஷ்டித்தாய். அதெங்ஙனே யெனில்—முன் நீ ஸ்ருஷ்டித்த பஞ்சமஹாபூதங்களும் ஒன்றினொன்று கலக்காமல் வெவ்வேறு யிருப்பதால், ஒரு கார்யத்திற்கும் உதவாததைக்கண்டு அவையெல்லாவற்றையும் பஞ்சீகரணவகையில் ஒன்றாய்ச் சேர்த்தாய். பஞ்சீகரணமெனில் பஞ்சமஹாபூதங்களில் ஒரு மஹாபூதத் தம்சம் பாதியும், மற்ற நாலு பூதங்களின் நாலம்சங்களும் பாதியாகிக் கூட்டில் ஒரு வஸ்துவெனப்படும். அதனால் ஆகாசம் பாதியும், வாயு, தேஜஸ்ஸு, ஜலம், பூமி இவைகளின் அரைக்கால் பாகங்கள் ஒன்றாகூடி பாதியாய், இந்த இரண்டு பாதிகளையும் ஒன்றாகக்கூட்டில், இது பஞ்சீக்ருத ஆகாசமெனப்படும். மேலும் வாய்வம்சத்தில் பாதியும் மற்ற நாலு பூதங்களின் எட்டிலொரு பங்குகள் நாலும்கூடி பஞ்சீக்ருத வாயுவெனப்படும். மற்றும் தேஜோம்சம் பாதியும் மற்ற நாலுபூதங்களின் எட்டிலொரு பங்குகள் நாலும் கூடி தேஜஸ்ஸு எனப்படும். பின்னையும் ஜலாம்சம் பாதியும், மற்ற நாலு பூதங்களின் எட்டிலொரு பங்குகள் நாலும் கூடி ஜலமெனப்படும். மற்றும் ப்ருத்வியம்சம் பாதியும் மற்ற நாலுபூதங்களின் எட்டிலொரு பங்குகள் நாலும் கூடி

ப்ருத்வீயெனப்படும். இப்படி பஞ்சீக்ருத மஹாபூதங்கள் ஒன்றில் மற்ற நாலுபூதங்கள் கலப்பிலிருக்கும். ஒரு பூதத்தினம்சத்தில் பாதியும் மற்ற பூதங்களின் எட்டிலொரு பங்குமாகி ஏற்றத்தாழ்வாகி ஐந்து ராசிகள் இருப்பதால், எந்த ராசியில் எந்த பூதாம்சம் அதிகமாயிருக்கிறதோ, அந்த ராசிக்கு அந்தப் பூதத்தின் பெயராகும். இப்படியிருக்கும் பஞ்சமஹாபூதங்களும் மஹதஹங்கார தத்துவங்களும் ஒன்றுகூடி ஏழு வஸ்துக்களிலிருந்து ப்ரும்ஹாண்டமுண்டு பண்ணும்பொழுது சட்டியைப்பண்ணும் குலாலாதிகள் போல் சரீராயாஸமின்றி நீரில் குமிழியெழுகிறபடி உன் இச்சாமாத்ரத்தில் உண்டுபண்ணினாய். அதன் பிறகு ப்ரம்மாண்டத்தில் பிறப்பிக்கப்படும், தேவமனுஷ்யதிர்யக்ஸ்தாவர ஸ்ருஷ்டிகளை "ஆள்வைத்து செய்விப்பேன்" என்று நான்முகனைப் படைத்தாய். இப்படி நீயே செய்யும் தத்துவ ஸ்ருஷ்டியும், அண்டஸ்ருஷ்டியும் ப்ரம்ஹஸ்ருஷ்டியும் ஸமஷ்டிஸ்ருஷ்டியெனப்படும். பின்பு சதுர்முகனின்றும் செய்விக்கப்படும் தேவாதிஸ்ருஷ்டி வ்யஷ்டிஸ்ருஷ்டியெனப்படும். இப்பொழுது சொல்லும் ப்ரம்ஹாண்டத்தைப் போலவே ப்ரம்மாண்டங்களை நீயொருவனே ஸ்ருஷ்டித்து ஆள்வைத்து கார்யம் நடத்துவதினால், அநேக கோடி ப்ரம்மாண்டநாயகனெனப்படுவாய். இந்த ஜகத்வ்யாபாரவ்யாஸங்கத்தில் என்னை மறவாமல் உன் தயார்த்ரசித்தத்தில் நினைப்பது, நினைப்பது, அநந்யஜனவத்ஸலபா! ஸ்ரீயதுசைலவல்லபா!

---

## பதினான்காம் விண்ணப்பம்.

பா— "எல்லா கர்மபலன்களையும் அனுபவிக்கும் ஸ்தானமான உலகங்களை நீ படைத்தாய்" என்று வீரரில் வீரனானவன் அஸுராரிக்கு[1] (தனுஜாரிக்குச்)ச் சொன்னான்.

ஸகலபுவனாவதாரா ! உலகங்கள் பதினான்கு. அவையெல்லாம் பிரும்மாண்டத்திலிருக்கும், அதெப்படியென்னில், பிரும்மாண்டமென்பது பக்ஷியைப்போல் உருண்டை வடிவாயிருக்கும். அதனுள் அவகாசம் எந்த திசையிலும் ஐம்பதுகோடி யோசனை யளவாயிருக்கும். அதனுள் கீழிருந்து அண்டகபாலத்துக்குமேல் கர்போதகம் இருக்கும் ஸ்தானம் எண்பத்துமூன்று லட்சத்தைம்பதினாயிரம் யோசனையாயிருக்கும். அதற்குமேல் வயலாகிய இடம் இருபத்துநாலுகோடியே பதினான்குலட்சத்து நாற்பத்தெட்டாயிர யோஜனமாயிருக்கும். அங்கு தென்பாகத்தில் ரௌரவாதிநரகங்களும், அதற்குமேல் சேஷலோகமென்பது முப்பத்திரண்டாயிரம் யோஜனையாயிருக்கும். அதற்குமேல் பூமி எழுபதினாயிரம் யோஜனத்திற்குள், ஒவ்வொன்று பத்தாயிரம் யோஜனங்களாகி மாடமாளிகை மரியாதையில் பாதாளம் முதலாய் ஸப்தலோகங்களாயிருக்கும். பூமிக்குமேல் சூர்யமண்டலம் வரையில் ஒரு லட்சம் யோஜனையாயிருக்கும் ஆக கீழ் அண்டபித்தியிலிருந்து[2] சூர்யமண்டலம் வரையில் இருபத்தைந்துகோடி யோஜனையாயிருக்கும். அதற்குமேல் சந்திரமண்டலம் ஒருலட்சம் யோஜனத்திலும் அதற்குமேல் நக்ஷத்திரமண்டலம் ஒரு லட்சம் யோஜனத்திலுமிருக்கும். அதற்குமேல் இரண்டு லட்சம் யோஜனையில் புதனும், அதற்குமேல் இரண்டுலட்சம் யோஜனையில்

சுக்ரனும், அதற்குமேல் இரண்டு லட்சம் யோஜனையில் மங்களனும், அதற்குமேல் இரண்டு லட்சம் யோஜனையில் ப்ருஹஸ்பதியும், அதற்குமேல் இரண்டு லட்சம் யோஜனத்தில் சனைஸ்சரனுமிருக்கும். அதற்குமேல் ஒரு லட்சம் யோஜனத்தில் ஸப்தரிஷிமண்டலமும் 3, அதற்குமேல் ஒரு லட்சம் யோஜனத்தில் ஜ்யோதிஸ்சக்ரகூடஸ்தனான த்ருவனுமிருப்பன். ஆக சூர்யமண்டலத்திலிருந்து த்ருவ மண்டலம் வரையில் பதினன்குலட்சம் யோஜனையும் ஸுவர்லோகமெனப்பட்டு இந்த்ராதி தேவதைகள் ஸ்தானமாயிருக்கும். அதற்குமேல் ஒருகோடி யோஜனமும் மஹர்லோகமெனப்பட்டு முதல் இந்த்ராதி பதவிகளிலிருந்து நிவ்ருத்தாதிகாரரான தேவதைகள் ஸ்தானமாயிருக்கும். அதற்குமேல் இரண்டு கோடி யோஜனமும், ஜனோலோகமெனப்பட்டு பிரம்ஹபுத்ரர்களான ஸனகாதிமுனிவர்களின் ஸ்தானமாயிருக்கும். அதற்குமேல் எட்டுகோடி யோஜனமும் தபோலோகமெனப்பட்டு ஓங்காராதி பரமரிஷிகளின் ஸ்தானமாயிருக்கும். அதற்குமேல் பன்னிரண்டுகோடி யோஜனமும் ஸத்யலோகமென்னப்பட்டு சதுர்முக ப்ரம்ஹ ஸ்தானமாயிருக்கும். அதற்குமேல் ஒருகோடியே எண்பத்தாறுலட்ச யோஜனமும் வெட்டவெளியாயிருக்கும். ஆக சூர்யமண்டலத்திலிருந்து மேலண்டப்பித்தி வரையில் இருபத்தைந்து கோடியும், கீழண்டப்பித்தி வரையில் இருபத்தைந்துகோடி யோஜனங்களுமாய் ப்ரம்ஹாண்டம் ஐம்பதுகோடி யோஜனை நீளமாயிருக்கும். இதில் ஸ்திரமான மாடிவீடுபோல் பதினன்கு உலகங்களிலிருக்கும் எல்லாப் பிராணிகளுடைய ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்திகளுக்கு நீயே காரணமாயிருப்பதால் ஸகலபுவனதாரன் என்னப்பட்டாய். ஆகையால் என்னுடைய ஸ்வரூப ரூபஸ்திதிகள் உன்னுடைய அதீனமா

யிருக்குமென்று பெரியோர்களால் கேட்டு என்னுடைய ஹிதாஹிதங்களை விட்டு இருக்கிறேன். என்னை ரக்ஷிக்கும் பொறுப்பு உன்னது, உன்னது, அநந்யஜனஸுலபா! ஸ்ரீயது சைலவல்லபா!

---

## குறிப்புகள்

1. அஸுராரி—அஸுரர் பகைவன். அஸுரர் தேவதைகளுக்கு ஸஹஜசத்ருக்கள். இவர்களுடைய உத்பத்தி புராணங்களில் பிரமனுடைய தமோமயமான சரீரத்தில் ஜகனப்ரதேசத்தில் நின்றும் உண்டானார்களென்று சொல்லப்பட்டிருக்கிறது. இவர்கள் தைத்யர் (திதிபுத்ரர்) தானவர், (தனுபுத்ரர்)என்று இருவகைப்பட்டிருப்பர். இவர்களுடைய குரு சுக்ராச்சாரியர்.

2. அண்டபித்தி—பிரம்மாண்டச்சுவர். இது பாதாளாதி ஸத்யலோகாந்தமான பதினன்கு லோகங்களையும் சுற்றிக்கொண்டு வெளியிலுள்ள மஹாஜலம் உள்ளே ப்ரவேசியாமல் தடுத்துக் கரையாயிருக்கும்.

3. ஸப்தரிஷிகள் — முனிச்ரேஷ்டர்கள் எழுவர். அவர் மரீசி, அங்கிரஸன், புலஹன், வஸிஷ்டன், அத்திரி, புலஸ்த்யர், கிருது என்போர் ஒரு சாரார். கச்யபன், அத்ரி பாரத்வாஜன், விச்வாமித்ரன், கௌதமன், ஜமதக்னி, வஸிஷ்டன். என்போரையும் ஸப்தரிஷிகளென்பர். இங்கு முதலேழைக் குறிக்கிறது.

---

## பதினைந்தாம் விண்ணப்பம்.

பா— "ஸமுத்திரங்களென்ன, மலைகளென்ன, நதிகளென்ன, இவற்றை உட்கொண்ட தராவலயம் அவ்வளவையும் நீ ஸ்ருஷ்டித்தாயென்பது நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது" என்று கர்னாடக சக்ரவர்த்தி சௌரிக்கு விண்ணப்பம் செய்தான்.

அகண்ட பூமண்டலாதீச்வரா! பூமியைச்சுற்றி அண்டபித்தி உருண்டையா யிருப்பதால் எந்தப்பக்கத்திலும் ஐம்பது கோடி யோஜனையாயிருக்கும். அதெங்ஙனெயென்னில்—பூமத்யத்தில் ஜம்பூத்வீபம் உருண்டையாய் எந்தப் பக்கத்திலும் லட்சயோஜனையா யிருக்கும். இந்த ஜம்பூத்வீப மத்யத்தில் மஹாமேரு ஸ்வர்ண மயமாய் கீழ் பதினாறாயிரம் யோஜனை அகலமும் மஸ்தகத்தின்மேல் முப்பத்திரண்டாயிரம் யோஜனை அகலமுமாய், சதுரமாய் வெல்லத்தைத் தலைகீழாக[1] வைத்தாற்போலிருக்கும். இந்த ஜம்பூத்வீபத்தை சுற்றின உப்புநீர்க்கடல் ஒரு லக்ஷ யோஜனை அகலமும் இதைச்சுற்றின ப்லக்ஷத்வீபம் இரண்டு லக்ஷ யோஜனமும், இதைச் சுற்றின கருப்பஞ்சார்க்கடல் இரண்டு லட்சம் யோஜனமும் இதைச்சுற்றின சால்மத்வீபம் நாலு லட்சம் யோஜனமும், இதைச்சுற்றின ஸுராசமுத்திரம் நாலு லட்ச யோஜனமும், இதைச்சுற்றின குசத்வீபம் எட்டு லட்ச யோஜனமும், இதைச்சுற்றின நெய்க்கடல் எட்டுலட்ச யோஜனமும், இதைச்சுற்றின க்ரௌஞ்சத்வீபம் பதினாறு லட்ச யோஜனமும், இதைக்சுற்றின தயிர்க்கடல் பதினாறு லட்ச யோஜனமும், இதைச்சுற்றின சாகத்வீபம் முப்பத்திரண்டு லட்ச யோஜனமும் இதைச்சுற்றின பாற்கடல் முப்பத்திரண்டு லட்ச யோஜனமும், இதைச்சுற்றின புஷ்க

ரத்வீபம் அறுபத்துநாலாயிரம் லட்ச யோஜனமும், இதைச் சுற்றின இனிய நீர்க்கடல் அறுபத்துநாலு லட்ச யோஜனமுமாயிருக்கும். இந்தபர்யந்தம் (இதுவரை) மனுஷ்யாதி பிராணிகள் ஸஞ்சாரத்திற்கு யோக்யமாயிருக்கும். அதன் புறவலயம் பிராணிகள் ஸஞ்சாரத்திற்கு யோக்யமில்லாமல், பளிங்குபோல் நிர்மலமாய், ஸ்வர்ணமயமாயிருக்கும் பூமியாய்ப் பத்துகோடியே பதினொன்றுலக்ஷ யோஜனை யகலமாயிருக்கும். இதைச்சுற்றின லோகாலோக பர்வதம் பத்தாயிரம் யோஜனையுயரமாயும், பத்தாயிரம் யோஜனமகலமுமாயிருக்கும். இதைச்சுற்றின அந்தகாரபூமி அண்டகடாஹ பர்யந்தத்திற்கு பன்னிரண்டுகோடியே, முப்பத்திரண்டு லட்சத்து நாற்பதினாயிரம் யோஜனையகலமாயிருக்கும். இப்படி பூமத்யத்திலிருந்து ஒருதிசை அண்டபித்தி பர்யந்தம் இருபத்தைந்துகோடி யோஜனை விஸ்தாரமாயிருக்கும். அதெங்ஙனேயெனில் :—ஜம்பூத்வீபமத்யத்திலிருந்து உப்பு நீர்க்கடல் வரையில் ஐம்பதினாயிரம் யோஜனமும், மற்ற ஆறு த்வீபங்களும் ஏழு ஸமுத்ரங்களும் சேர்ந்து இரண்டு கோடியே ஐம்பத்துமூன்று லட்சயோஜனமும், ஸ்வர்ண பூமி பத்துகோடியே பதினொன்றுலட்ச யோஜனமும், லோகாலோக பர்வதம் பத்தாயிரம் யோஜனமும், அந்தகாரபூமி பன்னிரண்டுகோடியே முப்பத்திரண்டு லட்சத்து நாற்பதினாயிரம் யோஜனமும், சேர்ந்து இருபத்தைந்துகோடி யோஜனமாயிருக்கும். இப்படி மேருமத்யத்திலிருந்து ஒரு பக்கம் இருபத்தைந்துகோடி விஸ்தாரமாயிருப்பதால் பூமண்டலம் ஒரு பக்கத்திய அண்டபித்தியிலிருந்து மற்றொரு பக்கத்து அண்டபித்தி வரையில் ஐம்பதுகோடி யோஜன விஸ்தாரமாயிருக்கும். இப்படிப்பட்ட பூமண்டலம் ப்ரளயஸமுத்ரத்தில் முழுகினவன்று நீ சுமந்துக்

காப்பாற்றினதால் அகண்டபூமண்டலாதீச்வர னெனப்படு வாய். உன் ஐச்வர்யத்தின்[2] எல்லையைக்காணப் பிரமன் முதலியவர்களுக்கும் அரிதாகிலும், பிரீதியுடன் நான் என் னறிவுக்கு எட்டினவரையில் விண்ணப்பம் செய்தேன். இதனை க்ஷமிக்கவும், க்ஷமிக்கவும், அநங்கஜனஸாலபா: ஸ்ரீயதுசைலவல்லபா!

---

குறிப்புகள்

1. வெல்லத்தைத் தலைகீழாய் வைத்தபடி—மைஸூர் தேசத்தில் "அச்சு வெல்லம்" என்பார்கள். வெல்லக்கட்டி கள் "ப" எழுத்துப்போல் அச்சில் வார்த்து செய்யப்பட்டு சதுரமாயிருக்கும்.

2. ஐச்வர்யம் — ஐச்வர்யமாவது ஸகலபதார்த்தங் களையும் தத்தத் கர்மானுகுணமாக நியமிக்கும், நியமன ஸாமர்த்யம்.

## பதினாறாம் விண்ணப்பம்.

பா— "உலகத்தில் பிரகாசிக்கும் ஸ்வர்க்கங்களின் பேதங்களை நீ உண்டுபண்ணினாய்" என்று யாதவகிரிநாதனடியில் சிறைப்பட்டவரிடத்தில் தயையுள்ள தலைவன் விண்ணப்பம் செய்தான்.

நிகிலபோகப்ரதா![1] போகமென்பது ஸுகம், துக்கம் இவற்றினநுபவம். துக்கத்தை அநுபவிக்கும் இடம் நரகமெனப்படும். ஸுகத்தை அநுபவிக்கும் தேசம் ஸ்வர்க்கம் எனப்படும். இந்த ஸுகாநுபவமான ஸ்வர்க்கங்கள் பதினான்கு லோகங்களிலுமுள. அவைகளில் பூமியிலிருக்கும் ஸ்வர்க்கங்கள் பூஸ்வர்க்கங்களெனப்படும். அவையெவையெனில் :—ஜம்பூத்வீபத்தின்[2] நவவர்ஷங்களில்[3] பாரதவர்ஷமொன்றன்றி மற்றைய எட்டு வர்ஷங்களும், வர்ஷபர்வதங்களும், மஹாமேருவும்,[4] ப்லக்ஷ, சால்மலி, குச, க்ரௌஞ்ச சாகங்களென்னுமைந்து த்வீபங்களிலிருக்கும் முப்பத்தைந்து வர்ஷங்களும், எல்லா வர்ஷ பர்வதங்களும், புஷ்கரத்வீபத்திலிருக்கும் இரண்டு வர்ஷங்களும், வர்ஷபர்வதமொன்றும், இவைகளெல்லாம் பூஸ்வர்க்கங்களெனப்படும். இவைகளில் ஜம்பூத்வீபத்திலிருக்கும் எட்டு வர்ஷங்களிலும் புஷ்கரத்வீபத்திலிருக்கும் இரண்டு வர்ஷங்களிலும் மானிடரெல்லோருக்கும் பத்தாயிரம் வருஷமாயுளுண்டாயிருக்கும்; பிணியும், பொறாமை, பிறர் குணதூஷணம் (அஸூயை) இவைகளொன்றுமில்லாமலிருக்கும்; அனைவரும் உத்தம சாதியராயிருப்பதால், சாதியில் உயர்வு தாழ்வு இல்லாமலிருக்கும்; சாதிவித்யாசமில்லாமையாலேயே ஆசாரபேதமில்லாமலிருக்கும். இங்கு இருக்கும் மனிதரெல்லாம் எப்பொழுதும் பசியும் தாகமுமில்லாமல் பரமஸந்துஷ்ட

ராய், தேவதைகளும் தாமும், ஸமானவேஷத்துடனும், ஸமானசக்தியும், ஸமானபுத்தியாயு மிருப்பர். ப்லக்ஷ, சால்மலி, குச, க்ரௌஞ்ச, சாகத்வீபங்களிலிருக்கும் முப் பத்தைந்து வர்ஷங்களிலும் வர்ஷபர்வதங்களிலும் காலமெப் பொழுதும் த்ரேதாயுக ஸமமாயேயிருக்கும். இவ்விடத்திய மனிதர்களும் தேவகந்தர்வர்களும் கூடியாடிக்கொண்டு ஐந்தாயிரம் வருஷம் ஆயுளுண்டாகி, ஆதி, வ்யாதியொன்று மில்லாமல் ஸௌகத்திலிருப்பர். ப்ராஹ்மண, க்ஷத்ரிய, வைச்ய சூத்ரரென்னும் சுத்தசாதியராய் ஸதாசாரஸம்பன்னராயு மிருடபதல்லாமலொருவரும் கலப்புஜாதியரில்லாமலிருப்பர். இவைகளில் இளாவ்ருதவர்ஷத்தில் பலபல போகங்களுக்கு ஆஸ்பதமாய் அழகான ஸ்தானங்களிருக்கின்றன. அவை யெவையெனில்:— மஹாமேரு அசையாமலிருக்கும் பொருட்டோ யென்னுமாப்போலே பலமான கீல்கள்போல் நான்கு திசையினும் நான்கு பர்வதங்களிருக்கும். அவை களில் கிழக்கு திசையில் மந்தரபர்வதமிருக்கும். அதன் மேல் ஆயிரத்துநூறு யோஜநமுயரமான கடபமரமிருக்கும் அந்த மரத்திற்கு ஆயிரம் பெரிய கிளைகளும், பதினாயிரம் சிறிய கிளைகளுமாகி யெல்லாக் காலத்திலும் மலர்களும், பழங்களுமுண்டாய்ச் சுற்றி ஆயிரம் யோஜனை திவ்யபரி மளமாயிருக்கும். இந்த பர்வதத்தினருகில் கிழக்கே சைத்ர ரதமென்னும் ச்ருங்காரத் தோட்டமும், அருணோதமென் னும் ஸரஸ்ஸுமிருக்கும். மேருவுக்குத் தெற்கில் கந்தமா தனமென்னும பர்வதமிருக்கும். அதன்மேல் ஆயிரத்துநூறு யோஜனமுயரமான நாவல் மரமிருக்கும். இதன் கிளைகளி லிருந்து ருசியாயும் ம்ருதுவாயும், ஸுகந்தமாயும், மஹாகஜ அளவாயுமிருக்கும், பழங்கள் சுற்றெல்லையில் விழுந்து கரைந்து ஜம்பூநதியென்னும் ஆறாய் மேருவைச்சுற்றிப்

புனல் பெருகிக்கொண்டிருக்கும். அதன் கரைமண்கள் அந்த ரஸத்தினால் நனைவதால் ஜாம்பூநதஸ்வர்ணமயமாய் தேவர்களின் அலங்காரத்திற்குத் தகுந்திருக்கும். அதன் தென்னண்டையில் கந்தமாதனமென்னும் ச்ருங்காரத்தோட்டமும், மானஸமென்னும் ஸரஸ்ஸுமிருக்கும். மேருவின் மேற்கே விபுலமென்னும் பர்வதமிருக்கும். அதன்மேல் ஆயிரத்துநூறு யோஜனமுயரமான அரசமரமிருக்கும். அதன் பழங்கள் எப்பொழுதும் மஹாகும்ப அளவாய் பரிமளயுக்தமாயிருக்கும். அதற்கு மேற்கில் வைப்ராஜமென்னும் ச்ருங்காரத்தோட்டமும், ஸிதோதமென்னும் ஸரஸ்ஸுமிருக்கும். மேருவின் வடக்கே ஸுபார்ச்வமென்னும் பர்வதமிருக்கும். அதற்குமேல் ஆயிரத்துநூறு யோஜனமுயரமுள்ள ஆலமரமிருக்கும். அதன் பழங்கள் எப்பொழுதும் மஹாகும்ப அளவாய் பரிமளயுக்தமாயிருக்கும். அதனருகில் நந்தனமென்னும் ச்ருங்காரத் தோட்டமும் ஸிதோதமென்னும் ஸரஸ்ஸுமிருக்கும். இந்த நாலு பர்வதங்களின் புறவலயத்தில் பல பர்வதங்களிருக்கும். இவை தாமரை கேஸரங்களின் மயமாயிருப்பதால் கேஸரபர்வதங்களெனப் படும். அவை யெவையெனில்:— மேருவிற்குக் கிழக்காய் ஸிதாம்ப, உதகுஞ்ஜ, மார்ஷ, விருங்க, மணிச்ருங்க, ஸபிந்து, மந்தர, வேணு, மந்த, ஸமேக, நிஷத, தேவபர்வதங்கள் என்னும் இந்த பர்வதங்களிருக்கும். மேருவிற்குத் தெற்கே த்ரிசிர, த்ரிச்ருங்க, கபிங்க, பதங்க, குசக்ர, தாம்ராப, விசால, ச்வேதோத, ஸமூல, வஸுதார, ரத்னதார, ஏகச்ருங்க, மஹாமூல, கஜசைல, பிசாசக, பஞ்சசைல, கைலாஸ, ஹிமவந்தமென்னும் இந்த பர்வதங்களிருக்கும். மேருவிற்கு மேற்கே கபில, பிஞ்ஜக, பத்ரஸுரஸ, மஹாபல, குமுத, மதுமந்த, அஞ்ஜந, மகுட,

க்ருஷ்ண, பாண்டூர, ஸஹஸ்ரசிகர, பாரியாத்ர, த்ரிச்ருங்க மென்னும் இந்த பர்வதங்களிருக்கும். மேருவின் வடக்கே சங்ககூட, நிஷத, ஹம்ஸ, நாக, கபிங்க, இந்த்ரசைல, நீல, கனகச்ருங்க, சதச்ருங்க, புஷ்கர, மேகசைல, விரஜ, ஜாருதி, த்ரிச்ருங்கமென்னும் இந்த பர்வதங்களிருக்கும். இந்த கேஸரபர்வதங்களின் தடவரைகள் ரமணீயமாய், தேவதைகளுக்குக் க்ரீடா ஸ்தானங்களாயிருக்கும். அவை யவையெனில், மேருவிற்குக் கிழக்காய், ஸிதாம்ப குமுத பர்வதங்களின் நடுவே, மூன்னூறு யோஜந நீளமும், நூறு யோஜந மகலமுமாய், இனிமையாய் நிர்மலமாய் இருக்கும் ஜலத்தினால் பூர்ணமான ஸ்ரீஸரஸ்ஸென்னும் குளமிருக்கும். அதனுள் மரக்காலளவான தாமரைகளிருக்கும். அவை களில் கோடிதளங்களுடைய ஸ்வர்ணமயமான ஒரு தாமரை யில் ஸாக்ஷாத் மஹாலக்ஷ்மி உறைவள். இந்த குளத்தினோ ரத்தில் நூறு யோஜனை யகலமும், இருநூறு யோஜனை நீள முமான வில்வமரவனமிருக்கும். அதனுள் மரங்கள் எப் பொழுதும் பலபுஷ்பயுக்தமாய் கூப்பிடு தூரத்தில் பாதி[5] உயரமாயிருக்கும். அங்கேயும், மஹாலக்ஷ்மி ஸித்தஸங்க நிஷேவிதையா[6] யிருப்பதால் அந்த வனத்திற்கு ஸ்ரீவன மென்று பெயராயிருக்கும். மேலும் வைகங்க மணிசைல மென்னும் இந்த பர்வதங்களின் நடுவே இருநூறு காத நீள மும் நூறு காத மகலமுமான ஒரு தண்ணீர் சுனையிருக்கும். அதனடியில் கூப்பிடு தூரத்தில் பாதி உயரமான பலமரங் களினால் பிரகாசிக்குமொரு மஹாவனமிருக்கும். அதன் நடுவில் காச்யபமுனிக்கு ஆச்ரமமாயிருக்கும். மற்றும் மஹாநீல குண்டமலைகளின் நடுவே தாமரைக் கூட்டத்தி னால் அழகான பிரகாசமுடைய ஸௌகந்தியென்னும் ஒரு குளமிருக்கும். அதனண்டையில் ஐம்பது யோஜன நீளமும்

முப்பது யோஜன மகலமுமான பனைமரவனமிருக்கும். அந்த மரங்கள் கூப்பிடு தூரத்தில் பாதி உயரமாயிருக்கும். தேவசைலமென்னும் மலையின் தாழ்வரையில் செடிமரங்களொன்று மில்லாமல் ஆயிரம் காத நீளமும் நூறு காதம் அகலமும் ஸமதளமாய் ஒரு கல்லினால் கட்டப்பட்ட அறை போல் அதன்மேல் முழங்கால் உயரம் நீருடன் ஐராவதத்திற்கு[7] க்ரீடாஸ்தானமாயிருக்கும். இவையெல்லாம் மேருவுக்குக் கிழக்கே இருக்கும் ஸ்தானங்கள். மேருவின் தெற்கே த்ரிசிர பதங்க மலைகளின் நடுவில் தித்திப்பாய் தெள்ளிய நீருடைத்தான பஹூதகமென்னும் நதி பெருகிக்கொண்டிருக்கும். அதன் கரையில் நூறு காத நீளமும் முப்பது காதமகலமுமான அத்திக்காடு இருக்கும். அந்த மரங்கள் ஒரு அம்பு எய்யும் உயரமாய் பவளவர்ணமான மண்குடப் பருமனான பழங்களுடன் கூடி, அங்கு கர்தம ப்ரஜாபதிக்கு ஆச்ரமமாயிருக்கும். தாம்ராப பதங்க கிரிகளின் நடுவே நூறு காதம் நீளமும், நூறு காதம் அகலமுமான ஸரஸ்ஸுமிருக்கும். அதனுள் செந்தாமரைகள் பாலசூர்யனைப்போல் ப்ரகாசமாயிருக்கும். அந்த ஸரஸ்ஸின் மத்தியிலிருக்கும் ஒரு மலைமேல் கோட்டை கொத்தளங்களால் விளங்கும் ஒரு வித்யாதரபுரமிருக்கும். விசால ச்வேத பர்வதங்களின் நடுவே முப்பது காதம் அகலமும் ஐம்பது காதம் நீளமாயிருக்குமொரு குளமிருக்கும். அதன் கரையில் ஒரு பெரிதான மாமரமிருக்கும். அதனில் மாம்பழங்கள் ஸ்வர்ண ஸங்காசமாய் அத்யந்தம் பரிமளயுக்தமாய் மண்குடப் பருமனாயிருக்கும். வஸுதாரா ரத்னதாரா பர்வதங்களின் நடுவே முப்பது காதம் நீளமும் நூறுகாதம் அகலமுமான ஒரு பலாசவனமிருக்கும். அதன் பூக்கள் எப்பொழுதும் நூறுகாத பர்யந்தம் பரிமளித்திருக்கும்; அதனில் சூர்ய

னுக்கு ஆச்ரமமாயிருக்கும். மேருவின் மேற்கே ஸுபார்சவ சிகி பர்வதங்களின் நடுவே நூறு காதம் அகலமும் நூறு காதம் நீளமும் நெருப்பால் சுடப்பட்ட சூடான நிலமாயிருக்கும். அதன் நடுவே இருபது காத நிலம் அக்னி மண்டலமாயிருக்கும். அதனுள் எப்பொழுதும் ப்ரளய காலாக்னி விறகில்லாமல் எரிந்துகொண்டிருக்கும். குமுத, அஞ்ஜன பர்வதங்களின் நடுவே புண்யஹ்ரதமென்னும் குளமிருக்கும். அதன் தீரத்தில் பத்து காதம் அகலமும், பத்து காதம் நீளமுமான மாதுளை வனமிருக்கும். அதனுள் எப்பொழுதும் மஞ்சள் வர்ணமாய் பெரிய பழங்களிருக்கும். அதனுள் ப்ருஹஸ்பதிக்கு ஆச்ரமமாயிருக்கும். பிஞ்ஜர ஸுரஸ பர்வதங்களின் நடுவே அநேக யோஜனை நீளமும், அநேக யோஜன மகலமுமான மஹாத்ரோணி யென்னும் குளமிருக்கும். அதனுள் விஷ்ணுவுக்கு ஸ்தான மாயிருக்கும். க்ருஷ்ண பாண்டர பர்வதங்களின் நடுவே முப்பது காதமகலமாயும், தொண்ணூறு காதம் நீளமாயும் மரம் செடிகளொன்றுமில்லாமல் நிஷ்பங்கதீர்க்கிகை என்னும் குளமிருக்கும். அதனுள் ஐந்து காத விஸ்தாரமான ஆல மரமிருக்கும். அந்த மரத்தில் சந்திர வர்ணனாய் நீல உடை அணிந்தவனாய் ஸஹஸ்ரவதனனென்னும் ஸ்வாமி யக்ஷாதிகளா லெப்பொழுதும் பூஜிக்கப்படுவான். ஸஹஸ்ரசிகர குமுத பர்வதங்களின் நடுவே ஐம்பது காதம் அகலமான பலதித்திப்புப் பழங்களை உடைத்தான வனமிருக்கும். அதனுள் சந்திரனுக்கு ஆச்ரமமாயிருக்கும். மேருவின் வடக்கே சங்ககூட நிஷத பர்வதங்களின் நடுவே அநேக யோஜன மகலமான புருஷஸ்தலமென்னும் ஸ்தானமிருக்கும். அதனுள் மரங்கள் அநேக யோஜனமுயரமாயிருக்கும். கபிங்க நாக பர்வதங்களின் நடுவே நூறு காதம் அகலமும் இருநூறு

காதம் நீளமுமாய் த்ராக்ஷகர்ஜூர வனமிருக்கும். அதனுள் பழங்கள் எப்பொழுதும் மிக மதுரமாயிருக்கும். புஷ்கர மேக பர்வதங்களின் நடுவே நூறு காதம் நீளமும் அறுபது காதம் அகலமுமான கல்லினல் கட்டப்பட்ட அறையிருக்கும். அதனுள் நான்கு திசையிலும் அநேக யோஜனை யகல நீளமுள்ள நான்கு குளங்களும் நான்கு வனங்களுமிருக்கும். கேஸர மர்யாதா பர்வதங்களின் மேல் எண்வகைத் தேவதைகளின் நகரங்களிருக்கும். இவையெல்லாம் போகபூமியெனப்படும். இவைகளில் அநுபவிக்கும் போகம் அநித்யமானதால் யான் இவைகளை ஆசைப்பட்டவனல்ல. நித்ய போகமென்னும் உன் கைங்கர்யத்தையே ஆசைப்பட்டேன். நிகில போக ப்ரதனென்னும் நீ எனக்கு இதை நிலைநிறுத்துவது, இதை நிலைநிறுத்துவது, அநந்யஜன ஸுலபா! ஸ்ரீயது சைலவல்லபா!

---

## குறிப்புகள்

1, நிகிலபோகப்ரதா — ஸமஸ்த பாக்கியங்களையும் கொடுப்பவனே! (கிருபைசெய்பவனே)

2. ஜம்பூத்வீபம்:—இந்த பூமியானது ஜம்பூத்வீபமுள்பட ஏழு த்வீபங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இவை முறையே ஸப்தஸமுத்ரங்களால் த்வீபங்களாகச் சூழப்பட்டிருக்கின்றன. இவைகளுக்குள்ளே ஜம்பூத்வீபமென்பது எல்லாவற்றிற்கும் நடுவிலிருக்கின்றது. மேல் விவரங்களெல்லாம் விஷ்ணு புராணத்தில் காண்க.

3. வர்ஷங்கள் :—கண்டங்கள்.

4. மஹாமேரு பர்வதம்:- ஜம்பூத்வீபத்திற்கு நடுவில் இந்த ஸ்வர்ணபர்வதமானது பூமியென்னுந் தாமரை மலருக்குக் கர்ணிகையைப்போல் விளங்குகின்றது.

5. கூப்பிடு தூரத்தில் பாதி:— கன்னடநாட்டு கிராமங்களில் "ஒந்துகூகுதாரி" என்றால் ஒரு மனிதன் கூப்பிட்டால் எவ்வளவு தூரம் கேழ்க்குமோ அவ்வளவு தூரமென்று அர்த்தம். இந்த அளவில் பாதி.

6. ஸித்தஸங்க நிஷேவிதையாய்:—ஸித்தர் ஸமூஹத்தால் ஆராதிக்கப்பட்டவளாய்.

7. ஐராவதம்:—தேவேந்த்ர வாஹனமான நான்கு தந்தங்களையுடைய வெள்ளை யானை, திக்கஜங்களிலொன்று.

8. ப்ரளயகாலாக்கினி:— நான்முகனின் ஒரு பகல் முடிவில் ஒரு நைமித்திக ப்ரளயம் உண்டாகும். இந்தத் தின ப்ரளயத்தில், பூலோக, புவர்லோக, ஸுவர்லோகங்கள் தகிக்கப்பட்டு நாசமாகும். இதுவே பிரளயாக்னி.

---

## பதினேழாம் விண்ணப்பம்.

பா— "நரகத்தில் இருத்தப்படுமவர் முன் ஒரு முறையும் உன் திருவடித்தாமரைகளைப் பற்றிலர்," என்று பகை அரசர் வேசிகளுக்கு விடனுனவன் மகா பராக்ரம சாலியின் திருவடித்தாமரையில் அமர்ந்து சொன்னன்.

நரகாந்தகா! நரகம் என்பது துக்கத்தை அநுபவிக்கும் ஸ்தானம். இந்த நரகங்கள் ஏழு பாதாள லோகங்களின் கீழ் இருக்கும் இருட்பள்ளத் தண்ணீருக்குங் கீழாயும் பிரும்மாண்டச் சுவரைப்பற்றின கர்போதகத்திற்கு மேலாயுமிருக்கும் ஸமவெளி ப்ரதேசத்தில் தென்திசையிலிருக்கும் ரௌரவம், ஸூகரம், ரோதம் என்னும் இவை முதலாய் அநேகவிதமாயிருக்கும். ரௌரவமென்னும் நரகத்தில் இருக்குமவனை யமபடர் மானை வேடர்கள் துளைப்பதுபோல், தயையின்றி எப்பொழுதும் பாணத்திற்கு இரையாக்கிக் கொண்டிருப்பர். தான் ஸாட்சியாயிருந்தும் கண்டபடி சொல்லாதவனும், காணுததைச் சொல்கிறவனும், தர்மாதிகாரத்தில் நின்று பக்ஷபாதம் செய்யுமவனும், பொய்ச் சொல்லுமவனும் இந்த நரகத்தில் விழுவர். வேட்டையில் சிக்கிக்கொண்ட பன்றியைத் துன்புறுத்துவதுபோல் எப்பொழுதும் வருத்திக்கொண்டிருக்கிற அந்த நரகம் ஸூகரமெனப்படும். கர்ப்பத்தைக் கரைத்தவனும், மூக்கு வாயை மூடிக்கொல்கிறவனும், பசுக்களைக் கொல்கிறவனும் இதில் விழுவர்.

நில மாளிகை செய்து பள்ளத்தில் புதைக்கப்படுமவர் நரகம் "ரோத" மெனப்படும். ப்ரம்மஹத்தி, மத்யபானம், பொன்திருடல், குருவின் மனைவியைக் கெடுத்தல், இக் குற்றங்களைச் செய்பவருடன் கூடியிருத்தல் எனப்படும் பஞ்சமஹா பாதகங்களைச் செய்யுமவர் இதில் விழுவர்.

உயரமான பனைமரத்திலிருந்து நிலத்திற்குத் தள்ளப் படும் நரகம் தாளமெனப்படும். ராஜாவைக் கொல்கின்றவ னும், வைச்யனைக் கொல்கின்றவனும் இதில் விழுவர்.

காய்ச்சின எண்ணைப் பாண்டத்தில் கொதிப்பிக்கும் நரகம் தப்தகும்பமெனப்படும். பதிவ்ரதையை விற்கின்ற வனும், குதிரையைக்கொன்று விற்கின்றவனும், நம்பினவர் களைக் கைவிடுமவனும், உடன்பிறந்தாளைச் சேருகின்றவ னும், ராஜாவின் வேலைக்காரனைக் கொல்லுமவனும் இதில் விழுவர்.

நெருப்பில் பொரித்து உவர்ப்பான உப்பில் புரளுவிக் கும் நரகம் லவணமெனப்படும். தாய் தந்தை முதலான பெரியோர்களைத் தூஷிப்பவனும், வேத தூஷணை செய்பவ னும், வேதவிக்ரயம் செய்பவனும் (கூலிக்கு வேதத்தை சொல்லிக் கொடுக்குமவனும்) மாமன் பத்நியோடு புணர்கின் றவனும் இதில் விழுவர்.

இருட்டு மூடிக்கொண்டவிடத்தில், காட்டு ஈ, அட்டை முதலிய க்ரூர ஜந்துக்கள் இடைவிடாமல் கடிக்கும் நரகம் க்ருமிபக்ஷமெனப்படும். தேவத்வேஷம், ப்ராஹ்மணத் வேஷம் செய்பவனும், ஸதாசாரத்தை விடுகின்றவனும் இதில் விழுவர்.

பிறர் உமிழ்ந்த நீரைக்குடிக்கும் நரகம் லாலாபக்ஷமெ னப்படும். தேவபூஜை, பித்ருகர்மம் இவை முதலானவை ஒன்றுமில்லாமல் தனக்கென்று சமைத்துக் சாப்பிடுகின்ற வர்கள் இதில் விழுவர்.

பட்டாக்கத்தி, சூரிக்கத்தி முதலிய அலகுகள் நட்டிருக் கும் கிணற்றில் தள்ளும் நரகம் விசஸனமெனப்படும். ஆயு

தம் செய்து பிழைப்பவரும், 'வேகுங்கை' முதலிய கபடாயுதங்களைத் தரித்தவரும் இதில் விழுவர்.

காய்ச்சின கால்விலங்கைக் காலுக்குத் தொடுத்து நெருப்பு ஜ்வாலை ஒன்றின்மேலொன்று ஓங்கும் கிணற்றில் தலைகீழாகத் தூக்கும் நரகம் அதோமுகமெனப்படும். சாஸ்திர நிஷித்தமான வஸ்துக்களை பரிக்ரஹிக்குமவர் இதில் விழுவர்.

அதிக துர்க்கந்தமான சீயுடைய சிற்றாற்றின் நரகம் பூயவஹம் எனப்படும். ஸாஹஸஞ்செய்பவனும் ம்ருஷ்டான்னத்தை யாவரையும் விட்டுத் தானொருவனே உண்பவனும், அவல், மாம்ஸம், பால், தயிர், நெய், தேன் முதலான நல்ல பதார்த்தங்களையும், எள்ளு, உப்பு முதலானவையும் விற்கிறவனும் இதில் விழுவர்.

காய்ச்சின சீ, ரக்தம் நிறைந்த கிணறு ருதிராம்பஸமெனப்படும். செம்மறியாடு, கோழி முதலியவைகளைச் சூது போருக்கு விடுபவனும், சமைத்த சட்டியில் உண்பவனும், விஷமிடுகின்றவனும், அரசர்களிடம் இல்லாத கோள் சொல்பவனும், மனைவி ஸம்பாதித்த பணத்திலிருந்து பிழைப்பவனும், அமாவாஸ்யை, ஸங்க்ரமணம் முதலிய பர்வகாலங்களில் அப்யங்கம்,[1] ஸ்திரீஸங்கமம் முதலானவைகளைப் பண்ணினவனும், வீட்டைக் கொளுத்திவிடுகின்றவனும், பட்சி நிமித்தத்தைச் சொல்லுமவனும், பட்சிகளைப் பிடித்து விற்று வாழுமவனும், கிராம புரோஹிதனும் இதில் விழுவர்.

நெருப்புப்போல் காய்ச்சின நெய்ச்சிற்றாறு வைதரணி எனப்படும். தேனீயை நாசம் செய்யுமவனும், ஊரை அழிப்பவனும் இதில் போய் விழுவார்கள்.

காய்ச்சின இரும்பு ஆணிகள் நாட்டப்பட்டிருக்கும் நிலத்தில் நடக்கச்செய்யும் நரகம் கிருஷ்ணம் என்னப்படும். பணம், வயது இவைகளால் செருக்கடைந்து எல்லைமீறி நடப்பவனும், எச்சில், தீட்டு இவைகளுக்குக் கூசாதவனும், இந்திரஜாலம் முதலான மோசஞ்செய்யும் வித்தைகளினால் பிழைப்பவனும் இதில் விழுவார். இப்படி இவை முதலான அநேகவிதமான பாபஞ்செய்பவர்கள் யாதனைப்படும்படியான நரகங்கள் அநேகவிதமாய் எண்ணில்லாமலிருக்கும். உன்னுடைய திவ்ய ஸங்கீர்த்தனத்திலிருந்தே ஸகல நரகபயமும் பரிஹாரமாவதால், உனக்கு நரகாந்தகனென்னும் பெயர் ஆகியிருக்கும். இப்படிப்பட்ட உன்னையே விசேஷமாய் நம்பியிருக்கும் என்னுடைய பயத்தைப் போக்கடித்து உன்னுடைய திருவடி கைங்கர்யத்தைக் கொடுத்து க்ஷமிக்கவும், க்ஷமிக்கவும், அநந்யஜனஸுலபா ! ஸ்ரீயது சைலவல்லபா !

---

## குறிப்புகள்

1. அப்யங்கம்:—தைலாதிகள்கொண்டு எல்லா அவயவங்களையும் மர்த்திக்கையாகிற ஒருவகை தேஹ ஸம்ஸ்காரம்; எண்ணை ஸ்நானம்.

## பதினெட்டாம் விண்ணப்பம்.

பா— "கர்வமுடைய பாபிகளும் உன் திருவடியை நினைத்த மாத்திரத்தில் பரிசுத்தர்" என்று ஸித்தகருடத்வஜாங்கனென்னும் விருதாளி, ஸித்தர்களால் அர்ச்சிக்கப்படும் திருவடியுகளத்திற்கு விண்ணப்பம் செய்தான்.

பரமபாவனு! பாபங்களென்னுமவை, மானஸிகங்களென்றும், வாசிகங்களென்றும், காயிகங்களென்றும் மூன்று விதங்களாயிருக்கும். நிஷித்த பதார்த்தங்களை உண்பதும், அயோக்யர் வீட்டில் உண்ணுவதும், யஜ்ஞாதிகர்மங்களுக்கு தகாதவனுக்கு அவற்றைச் செய்விப்பதும், அயோக்யரிடத்தில் தானம் ஏற்கிறதும், பிறர் மனையாளோடு புணர்கிறதும், அயோக்யர் ஸபையில் ஸ்தானம் வஹிப்பதும், பிறர் உடைமையை அபகரித்தலும், ஜீவஹிம்சை செய்வதும் முதலானவை காயிகமான பாவங்களெனப்படும்.

நிஷ்டுர வார்த்தைகளைச் சொல்லுவதும், பொய் சொல்கிறதும், கோட்சொல்கிறதும், இஹபரத்திற்குப் பிரயோஜனமில்லாத வீண்வார்த்தையில் காலங்கழிப்பதும், விவாதம் செய்வதும், வேதவிக்ரயஞ்செய்வதும், புறம்பேசுவதும் முதலானவை வாசிகமான பாவங்களெனப்படும்.

பிறருக்குத் தீங்கு எண்ணுவதும், தகாத ஆசையும், தகாத கோபமும், லோபமும், அஜ்ஞானமும் செருக்கும், உட்பகையும், முதலானவை மானஸிக பாவங்கள் எனப்படும்.

இந்தப் பிரகாரமான பாபங்களைப் பண்ணினவர், எந்தெந்த விதமான சரீரத்தில் எங்கெந்த விதங்களில் பாபங்களைப் பண்ணினார்களோ, பாணந்தத்தில் அதே பிரகார

மான யாதனுசரீரத்தை யடைவர். யாதனுசரீரமென்பது —அறுத்தாலும் துளைத்தாலும் கிழித்தாலும் சுட்டாலும் அழிந்துபோகாமல், தொட்டாலே சுருங்கும்படி ம்ருதுவாய், மிதமற்ற வேதனையை அனுபவித்துக்கொண்டிருக்கும். இப்படியிருக்கும் சரீரத்தில் அந்த பாபிகளை யாதனைப் படுத்தும் க்ரமம் எப்படியெனில் :—

இந்தப் பாபியை நிறுத்தி ரம்பத்தால் அறுப்பதும், கைவாளால் கொத்துவதும், உவர்ப்பான நிலத்தில் உருட்டுவதும், எலுமிச்சம் புளிசிற்றாற்றில் முழுகவைப்பதும், காய்ச்சின எண்ணை பாண்டத்தில் கொதிப்பிப்பதும், கூராக்கின கோடரியால் (உடலில்) எல்லாப் பூட்டுகளைக் கத்தரிப்பதும், பருந்து, காக்கை, நாய், நரி இவைகளுக்கும் பூதப்ரேத பிசாசுகளுக்கும் குடல், உதிரம், மாம்ஸம், இவைகளைப் பங்கிடுவதும், சாணை பிடித்த சஸ்திரக்கத்திபோலிருக்கும் இலைகளால் பளபளப்பாயிருக்கும் காடாகிற அஸிபத்ரவனத்தில் அந்தப் பக்கத்திலிருந்து இந்தப் பக்கத்திற்கு ஓடுவித்தும், இந்தப் பக்கத்திலிருந்து அந்தப் பக்கத்திற்கு ஓடுவித்தும், உடலின் மாம்ஸத்தையும் குடல்களையும் கத்தரிப்பதும், கவணில் வைத்து வீசி வீசி எறிவதும், உயரமான மலையின் நுனிக்கோட்டுக் கல்லின்மேல் உட்கார வைத்து சறுக்கச்செய்து தலைகீழாக்கித் தள்ளுவதும், காய்ச்சின வாணலியின்மேல் புரட்டுவதும், உடலையெல்லாம் பெரிது சிறிதாகக் கத்தரிப்பதும், கத்தரித்த துண்டுகளைக் குடத்தில் நிறைத்துக் கொதிப்பிப்பதும், இவை முதலான யாதனைகள் பலவும் கோடி யுகம் அனுபவித்து, மறுபடியும் பூமியில் பிறக்கும்போழுதும் மானஸிக பாபங்களைச் செய்தவர் பட்சி மிருகங்களாகவும், காயிக பாபங்களைச் செய்தவர் புல் செடி மரங்களாயும் பிறப்பர். இந்தப்பாவி

களிலும் பிரம்ஹ ஹத்தியைச்செய்தவர், நாய், பன்றி, கழுதை, ஒட்டகம் இவைகளின் யோனிகளிலும், ஆடு, கோழி, மான், பட்சிகளிலும், சண்டாள யோனிகளிலும், பல தடவை பிறந்துக்கொண்டிருப்பர். ஸுராபானம் பண்ணின அந்தணர் க்ருமி கீட பதங்க யோனிகளிலும், அமேத்ய பக்ஷகங்களான நாய், பன்றிகளிலும், ஹிம்சை செய்யும் புலி, கரடி முதலானவைகளிலும், தொடப்படாத காக்கை, கோட்டான் முதலியவைகளிலும், அந்த்யசாதியி லும் பலதடவை பிறந்துகொண்டிருப்பர். பொன் திருடல் செய்தவர், பாம்பு பல்லிகளிலும், நீர்க்காக்கை, நீர்க்கோழி முதலான ஜலசர பட்சிகளிலும், பூதப்ரேத பிசாச ப்ரம்ஹ ராக்ஷஸ ஜாதியிலும் பிறந்துக்கொண்டிருப்பர். குருவின் மனையாளோடு புணர்ந்தவர் புல், புதர், முட்செடிகளாயும், பிணத்தைச் சாப்பிடும் நாய், நரிகளாயும், கொடிய செயலில் நிற்கும் மனிதர்களாயும் பிறந்துகொண்டிருப்பர். இந்த மகா பாவிகளுடன் கூடியாடுகின்றதாகிற 'தத்ஸம்யோகம்' என்னும் பாவத்தைப் பண்ணினவர்கள் பிரம்மராக்ஷஸ்ஸின் யோனியில் பிறந்துகொண்டிருப்பர். இப்படி இவை முத லான பலவித பாவங்களைச் செய்தவர் பல பாபயோனிகளி லும் பிறந்துக்கொண்டிருப்பர். இந்த பாபிகள் தங்கள் பாவமனைத்திற்கும் தனித்தனியே ப்ராயச்சித்தம் பண் ணுவதெனில் ஜந்மகோடியிலும் முடிவு அடையாது. தயாளுவான உன்கடாக்ஷத்தால் மனதில் விவேகம் உதித்து. பிந்தின பாவங்களுக்குப் பச்சாத்தாபமுண்டாய், சக்தி இருந்த அளவு பிராயச்சித்தத்தை ஆசரித்து, நீ ஆண்டவன், தான் ஆள் என்னுமெண்ணம் கூடி, உன்னையே நினைத்திருப் பது என்னும் க்ருஷ்ணானுஸ்மரண மொன்றிலிருந்தே[1] ஸமஸ்தபாவமும் ஸவாஸநமாய்ப் போகுமென்னும் சாஸ்த்

ஸார்த்த தத்துவத்தை யறியும்பொழுது நீயே பரமபாவ னெனப்படுவாய். ஆகையால், நீ என்னுடைய பாவங்கள் பெரிதெனக் கொள்ளாமல் உன்னுடைய பாவனத்வத்தைப் பிரகாசிப்பித்து என்னை ரட்சிப்பது, என்னை ரட்சிப்பது, அநந்யஜநஸுலபா ! ஸ்ரீயது சைலவல்லபா !

---

## குறிப்புகள்

1. சாந்திராயண முதலான வ்ரதங்களாயும், யஜ்ஞும், தானம் முதலான கருமங்களாயும், விதிக்கப்பட்டிருக்கிற ஸகல பிராயச்சித்தங்களுக்கும் மேலான பிராயச்சித்தம் ஸ்ரீ கிருஷ்ணனுடைய ஸ்மரண ஸங்கீர்த்தனாதிகளேயாம். அதாவது எம்பெருமான் நிருபாதிக ஸர்வசேஷி என்றும், தான் அவனுக்கு ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் நிருபாதிக தாஸன் என்றும், ஆகையால் அவைகளில் கர்த்ருத்துவாதிகள் ஸ்வாதந்திரியத்தாலல்லவென்றும், அவைகளைப் போக்கும் உபாயம் அவனே என்றும் நினைத்து, அவன் திருவடிகளையே சரணமடைந்து, அவன் திருநாமங்களைக் கீர்த்தனஞ் செய்துகொண்டிருத்தல். ஆகையால் இந்த ஸ்ரீ கிருஷ்ணாநுஸ்மரண பிராயச்சித்தமானது பகவத் குணப் பிரபாவத்திலும், ஆத்ம ஸ்வரூபத்திலும் தெளிந்து நிற்கின்ற விலக்ஷணாதிகாரிக்கேயல்லது மற்றவர்களுக்கன்று. மற்றவர்களுக்கோ கர்மாதிகளே என அறியவேண்டும்.

ஜபஹோம அர்ச்சனாதி ஸகல கருமங்களிலும் ஸ்ரீமந் நாராயணனை ஸ்மரணஞ்செய்து அவனிடம் சரணமடைந்த மகாத்மா அப்போதே ஸகல பாபத்தினின்றும் கிலேசங்களினின்றும் நீங்கினவனாய் மோட்சமடைவான்.

---

## பத்தொன்பதாம் விண்ணப்பம்

பா.— "ச்ரிய: பதி,[1] லோக கர்த்தா, நிகமஸ்துதன் அத்புதவைபவமுள்ளவன், ஜகத்ரூபன், அஸாத்யஸாதகன், அசேஷஸமன், பரதத்வன், ப்ருதக்ரூபவிசித்ர கர்மபலதாயகன்," என்னும் இவ்வகையில் தைத்யாரிக்கு, மஹீமஹேந்திரன் ப்ரீதியுடன் பதினெட்டு உதார கத்யங்களைச் சொன்னான்.

பா.— பதினான்கு லோகங்களையும் ஆராயுமளவில் இவை ஸுகத்தைக் கொடுப்பதில்லை, மற்றும் அநித்யம்; பரப்ரம்ஹமொன்றே நித்யம், அமிதாநந்தமயம், என்றும் தெரியவருகிறது; இந்த முடிவான அர்த்தத்தை ஆராயுமளவில் "பண்டிதர்களுக்கு இந்த நிலையில் (லீலாவிபூதியில்) வைராக்யமும், மோக்ஷத்தில் ஆசையும் உண்டாகும்" என்று ஸனகமுனியால் நன்றாக ஆராதிக்கப்படுமவனுக்கு ப்ரௌடப்ரதாபன் மிகவும் ஸந்தோஷத்தோடு அன்புடன் சொன்னான்.

பா.—"முக்தியில் ஆசையும், இதல்லாத விஷயங்களில் விரக்தியும் கலந்தவர்களுக்கு (இவற்றையனுஸரித்து ஈச்வரனைப் பற்றுமவர்களுக்கு) மோட்சத்திற்கு அவனே உபாயமென்பது யுக்தம்" என்று சுகதேவேந்திரன் தண்டநிட்டு, அநிதர[2] பக்த குடும்பனுக்குச் சொன்னான்.

பா.— முன் ஈராறு பத்யங்களில் ஒரே முகமாய் முக்திக்கு உபாயத்தையும் மோட்சத்தையும் பண்டித மண்டலம் ஒப்பும்படி நாராயணன் திருவடியில் அபேத்யவிக்ரமன் விண்ணப்பம் செய்தான்.

மோக்ஷதானைகதீக்ஷிதா[3]! வையத்தார் ஆசைப்படும் புருஷார்த்தங்களில் அர்த்தகாமாதிகள் ஸ்திரமற்றவைகளும் அல்பஸுகங்களுமென்று அவைகளைக்கழித்து, நித்ய

மும், நிரவதிகாநந்தமுமான மோக்ஷமொன்றையே புகழ்ந்து, இதைப்பெறுவதற்கு கர்மம், ஜ்ஞானம், பக்தி இவைகள் உபாயங்களென்று வேதாந்தங்களிலிருந்து அறிவித்தாய். இந்த தத்துவார்த்தத்தைப் பெரியோர் உபதேசத்தினின்றும் அறிந்து ஆராயுமளவில் கர்மயோகமென்பது—அறிவும், த்ராணமும், ஸத்வமுமில்லாத எமக்கு நீ இவையெல்லாம் கொடுத்து, நீ கொடுத்த ஸாமக்ரியிலிருந்து உன் ஸேவையென்னும் நித்ய கர்மங்களை எங்கள் கையினால் நீயே செய்விக்கிறதனால், வர்ணாச்ரமதர்மங்களை யாம் செய்வோமென்னும் கர்த்ருத்வத்திற்கும், இந்த கர்மத்திலிருந்து இந்த பலத்தை அடைவோமென்னும் இச்சைக்கும் காரணமில்லையென்று அறிந்து, இந்த நினைவு கூடி வர்ணாச்ரமதர்மங்களை அனுஷ்டிக்கும் விவேகம்.

ஜ்ஞானயோகமென்பது:— இந்த கர்மயோகத்திலிருந்து பூர்வத்திய ஸகல பாபங்களென்னும் தூய்மையின்மையைக் கழித்து நிர்மலமான அந்த: கரணத்தில் சாஸ்திரத்தில் சொல்லும் முறையில் இருபத்துநான்கு தத்வங்களின் நிலையை அறிந்து, இவையெல்லாவற்றிற்கும் அதிகம் எனப்படும் ஜீவாத்மபரமாத்மஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரித்தபடி அறியும் அறிவு.

பக்தியோகமென்பது:—ஜீவ, பரமர்களின் நிலைமையை அறிந்து நித்யமென்னும் வர்ணாச்ரம கர்மத்தை அனுஷ்டித்துக்கொண்டு, வேதாந்தத்தில் ஆணையிட்ட வகையில் ப்ரீதிரூபமாய் உன் திருவடிகளை இடைவிடாமல் நினைக்கும் நிதித்யாஸனம்.[4] இவற்றின் நிலையை ஆராயுமளவில், கர்மயோகம் மனதிற்குச் தூய்மையுண்டுபண்ணிக்கொண்டு ஜ்ஞானயோகத்தை உண்டாக்கி பக்தியோகத்திற்கு அங்கமாயிருப்பதன்றிக்கே தானாய் மோக்ஷஹேதுவன்று. ஜ்ஞானயோக

மும் பக்திசெய்த ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தையும் பக்திக்கு விஷயமான உன் ஸ்வரூபத்தையுமறிவித்துப் பக்தியோகத்தை வளர்த்துவதன்றித்தானாய் மோக்ஷஹேதுவன்று. பக்தி யோகம் ஆண்டவன் எனப்படும் உன் அடியில் தாஸர் எனப்படும் யாம் செய்யும் ப்ரீதி. உலகத்தில் ஆருமவனுக்கு ஆட்கள் மேல் பிறந்த ப்ரீதியே கார்யகரமன்றிக்கே ஆளென்னுமவனுக்கு ஆள்பவனிடத்தில் உண்டான ப்ரீதி கார்யகரமன்றாததனால் பக்தியும் ஸாக்ஷாத் மோக்ஷஹேதுவன்று. உன் ப்ரீதியொன்றே மோக்ஷஹேதுவாகையால் உன் தயாப்ரவாஹத்தில் பிறந்து வளர்ந்த பராங்குச,[5] பரகால[6] யதிச்ரேஷ்டர்கள் முதலானவர்கள் தொடங்கி லக்ஷ்மணாசார்யர்[7] பர்யந்தமான பெரியோர்களைக் கடாக்ஷித்து என்னிடத்தில் தயைசெய்வது, தயைசெய்வது, அநந்யஜனஸுலபா! ஸ்ரீயதுசைலவல்லபா!

---

குறிப்புகள்

1. உதார கத்யங்கள் :— எல்லா அர்த்தங்களையும் கொடுப்பதான வசனகாவ்யங்கள்.

2. அநிதர :— எப்பொழுதும் வேறு ஸம்பந்தமில்லாமல் விஷ்ணுஸம்பந்தமாயிருக்கும்.

3. மோக்ஷதானைக தீக்ஷிதன் :—மோட்சத்தைத்தானம் பண்ணுவதை முக்கியமாக வைத்துக்கொண்ட ஒரு பட்டப்பெயர் உற்றவன்.

4. நிதித்யாஸனம் :— த்யானம் செய்யவேணுமென்னும் உறுதியான (தீர்மான) புத்தி.

5. பராங்குசர்:—நம்மாழ்வார்.

6. பரகாலர் :—திருமங்கைமன்னன்.

7. லக்ஷ்மணாசார்யர் :—ஸ்ரீராமானுஜாசார்யர்.

## இருபதாம் விண்ணப்பம்.

பா.— "ஸாத்விக சாஸ்திரங்களிலேயே தத்துவம் நிர்ணயிக்கப்படும்" என்று ஸாத்வநிதி திருவடியில் வைஷ்ணவ தத்துவத்தை எடுத்துக் காண்பிப்பதில் பண்டிதனானவன் விச்வாஸத்துடன் அமர்ந்து சொன்னான்.

ஸத்வப்ரவர்த்தகா![1] வேதாந்தார்த்தத்தை நிர்ணயிக்குமளவில் இதிஹாஸ புராணங்களாலேயே நிர்ணயிக்கவமையும். அவைகளில் ஸ்ரீராமாயணம், பாரதம் முதலான இதிஹாஸங்கள் உன்னுடைய மஹிமையையே சொல்லுவதால் ஸாத்விகங்களாய் ஸர்வாம்சத்திலும் ப்ரமாணங்களாயிருக்கும். ஸகல புராணங்களுக்கும் சதுர்முகன் ப்ரவர்த்தகனானபடியால் அந்த சதுர்முகனுக்கு யாதொரு நாளில் (கல்பத்தில்) யாதொரு குணம் விஞ்சியிருக்குமோ அந்த நாளில் சொன்ன புராணம் அந்த குணமாயிருக்கும். அதெப்படியெனில் :—சதுர்முகனின் தினத்திற்கு கல்பமென்று பெயர். சதுர்முகனும் ப்ரக்ருதியில் சிக்குண்ட காரணத்தால் அவனுக்கும் ஸத்வம், ரஜஸ், தமஸ் இந்த குணங்களுண்டு. யாதொரு கல்பங்களில் ஸத்வகுணம் ப்ரபலமாயிருக்குமோ அந்த நாள்களில் சொன்ன புராணங்கள் ஸாத்விகங்களெனப்பட்டு உன் மகிமையைப் புகழ்ந்து மோக்ஷஸாதனமாயிருக்கும். மற்றும் யாதொரு நாளில் ரஜோகுணம் விஞ்சியிருக்குமோ அந்த நாளில் சொன்ன புராணங்கள் ராஜஸமெனப்பட்டு சதுர்முகனின் ஏற்றத்தைச் சொல்லி ஸ்வர்க்கம், ஐச்வர்யம் முதலான மத்யமபலஸாதனமா யிருக்கும். மற்றும் யாதொரு நாட்களில் தமோகுணம் பிரபலமாயிருக்குமோ, அந்த நாட்களில் சொன்ன புராணங்கள் தாமஸங்களெனப்பட்டு ருத்ரனின்

ஙற்றத்தைச் சொல்லி அதோகதி ஸாதனமாயிருக்கும். ஆகையால் சதுர்முகன் ஸத்வம் விஞ்சின தினங்களில் சொன்ன ஸாத்விக புராணங்கள் முக்கிய ப்ரமாணங்களாய் இருக்கும். மற்றைய ராஜஸ, தாமஸ புராணங்களில் ஸாத்விக புராணத்திற்கு விரோதமில்லாத அம்சமெல்லாம் பிரமாணமாயிருக்கும். விருத்தமாயிருக்கும் அம்சம், தங்கள் அர்த்தத்தில் பிரமாணமாயில்லாமல் ஸ்தோத்திராதிபரமாயிருக்கும். இந்த மர்யாதையை அறியாமல் ராஜஸ, தாமஸ புராணங்களில் சொல்லியதெல்லாம் பிரமாணமென்று நம்பி நடக்கிறவர்களுக்கு மத்யமகதியும் அதோகதியும் உண்டாகுமென்று மத்ஸ்ய புராணத்தில் சொல்லியிருக்கிறது. ஸ்ரீ பகவத்கீதையில் நீயும் சொன்னாய். இதன் நிலையை விசாரம் செய்ததில் பரமபுருஷார்த்தமான மோக்ஷமென்பது அர்த்தபஞ்சக[2] தத்வஜ்ஞானமில்லாமல் கூடாது; அந்த தத்வஜ்ஞானம் ஸாத்விக சாஸ்திர பரிச்ரமமில்லாமல் கூடாது; அந்த ஸத்வகுணம் உன் ஜாயமான கடாக்ஷமில்லாமல்[3] கூடாது. ஆகையால் உன் ஜாயமான கடாக்ஷத்தைப்பெற்று ஸாத்விகராய் ஸாத்விகபுராணத்திற்கு அநுகுணமாய் வேதாந்தார்த்தத்தை நிர்ணயஞ்செய்யும் மகாத்மாக்களை, விசேஷமாய் நம்புகிற ஸத்வகுணத்தை எனக்கு அருளவேணும், அருளவேணும், அநந்யஜந ஸுலபா! ஸ்ரீயதுசைலவல்லபா!

---

## குறிப்புகள்

1. ஸத்வப்ரவர்த்தகா:— ஸத்வகுணத்தை நம்முள் வ்யாபிக்கும்படி செய்பவனே.

2. அர்த்தபஞ்சக ஜ்ஞானம் ;—அர்த்தபஞ்சக ஜ்ஞாநமாவது 1 ஸ்வஸ்வரூப, 2 பரஸ்வரூப, 3 புருஷார்த்தஸ்வரூப, 4 உபாயஸ்வரூப, 5 விரோதிஸ்வரூபங்களை உள்ளபடி அறிகை.

3. ஜாயமான கடாக்ஷம் :—பிறக்கும்பொழுது சேதநன் மேல் விழும் ஈச்வரகடாக்ஷம்.

---

## இருபத்தொன்றும் விண்ணப்பம்.

பா— "யோகம், ஸாங்க்யம், பாசுபதம்—இவ்வாகமங்களெல்லாவற்றிற்கும் பாஞ்சராத்ரம் பெரிது," என்று மதார்த்தங்களை விபர்த்தனம் செய்வதில் ஆச்சரிய சரிதமுள்ளவன் அந்த கோவிந்தனிடம் ப்ரீதியுடன் சொன்னான்.

ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரா[1]! தந்த்ரங்களென்பவை ஸாங்க்யமும், யோகமும், பாசுபதமும், ஸ்ரீபாஞ்சராத்ரமுமாம். இவைகளுக்கு ஸித்தாந்தங்களென்றும், ஆகமங்களென்றும் பெயராம். இவற்றில் ஸாங்க்யதந்த்ரமென்பது இருபத்தைந்து தத்துவங்களின் ஸ்வரூபத்தை நிரூபணம் செய்யப் பிறந்திருப்பதனால் தத்துவநிரூபணம் செய்யுமம்சத்தில் பிரமாணமாயிருக்கும். இந்த தத்துவ நிரூபணத்தில் எல்லோரும் ப்ரீதியைக் கொள்ளவேண்டுமென்று இவ்விருபத்தைந்து தத்துவங்களையும் கொண்டாடுங் கொண்டாட்டம் அளவுமீறி "இத் தத்துவங்களினின்றே உலகம்பிறப்பது, இவைதல்லாத இருபத்தாறும் தத்துவமான ஈச்வரனைக் கண்டவர் யார்?" என்றிவை முதலான வேதவிருத்தங்களான சில வசனங்களிருக்கின்றன. இந்த பாகம் ஸ்தோத்திரமன்றிக்கே பிரமாணமன்று. யோகதந்த்ரமென்பது யமநியமாதி[2] யோகங்களை நிரூபிக்கப் பிறந்திருப்பதால், யோகநிரூபணம் செய்யுமம்சத்தில் பிரமாணமாகும். இந்த யோக நிரூபணத்தில் எல்லோருக்கும் ப்ரீதியை யுண்டு பண்ண வேண்டுமென்று ஜகதீச்வரனுக்கும் இந்த யோக மகிமையாலேயே ஜகதீச்வரத்வ முண்டாயிற்று, என்றுமிவை முதலான வேதவிருத்தங்களாய் சில வசனங்களிருக்கும். அந்த பாகத்தில் தோத்திரரூபமேயன்றிப் பிரமாணமன்று. பாசுபதமென்பது தர்மம், அர்த்தம், காமம் என்னும்

மூன்றுவகைப் பலஸாதனமான இதர தேவதைகளை யுபாஸனம் செய்யும் வழியை நிரூபிப்பதற்காகப் பிறந்தமையால் அந்தந்த தேவதைகளை யுபாஸனம் செய்வதில் ப்ரீதியை யுண்டுபண்ணுமம்சத்தில் பிரமாணமாகும். இந்த தேவதாந்தர உபாஸனைகளில் எல்லோரும் ப்ரீதியுடன் முயற்சிக்க வேண்டுமென இந்த தேவதாந்தரங்களே பரதத்துவம் என்றிவை முதலான வேதவிருத்தங்களாய்ச் சில வசனங்களிருக்கும். அந்த பாகத்தில் ஸ்தோத்திரமாத்திரமன்றிக்கே பிரமாணமன்று. ஸ்ரீ பாஞ்சராத்ரமென்பது வேதாந்த தாத்பர்ய விஷயமான பகவதுபாஸன நிரூபணார்த்தமாய்ப் பிறந்திருப்பதால் ஸர்வாம்சத்திலும் வேதாந்தத்திற்கேற்றதாய்ப் பிரமாணமாயிருக்கும். இவ்வர்த்தம் மஹாபாரதத்தில் சாந்திபர்வத்தில் நன்றாய் விளக்கப்பட்டிருக்கின்றது. அஃதெங்ஙனேயெனில்:— மோக்ஷதர்மத்தில் நிஷ்டாநிர்ணயாத்தியாயத்தில்[3] வேதங்களும், ஸ்ரீ பாஞ்சராத்ரமும், ஸாங்க்யமும், யோகமும், பாசுபதமுமென்னுமிந்த ஐந்து ஸித்தாந்தங்களும் ஒன்றுக்கொன்று விருத்தமான தத்துவ நிலைகளை நிர்வாஹிக்கின்றனவா? எல்லாம் ஒரே தத்துவத்தின் நிலையை யாதரிக்கின்றனவா? என்று கேள்விமூலம் விசாரித்துப் பலவழிகள் ஒரே பட்டணத்தைச் சேர்ந்து ஒரே நிலையை யடைவதைப்போல் வேதமும் ஸ்ரீ பாஞ்சராத்ரமும் மற்ற மூன்று தத்துவங்களும் உன்னுடைய மஹிமையை நிர்வாஹித்து ஒரே நிலையையடையுமென்று நிர்ணயமாயிருக்கிறது. இப்படிக்குத் தந்த்ரங்களெல்லாம் உன்னை நிர்வாஹித்து உனக்குப் பரதந்த்ரமாயிருக்கையால் நீ ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரனென்னப்படுவாய். இப்படியிருக்கும் நீயே எனக்கு உன் நிலையை யறிவிப்பது, அறிவிப்பது, அநங்யஜனஸுலபா! ஸ்ரீயது சைலவல்லபா!

## குறிப்புகள்

1. ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரா—எல்லா தந்த்ர ஆகமங்களுக்கும் மேலானவன்.

2. யமநியமாதி—யம, நியம, ஆஸன, ப்ராணாயாம, ப்ரத்யாஹார, த்யான, தாரண, ஸமாதி ரூபமான அஷ்டாங்கயோகம்.

3. நிஷ்டாநிர்ணயாத்யாயம்—எந்த நிலையில் நிற்கக் கூடாது, எந்நிலையில் நிற்கவேண்டுமென்பதை நிர்ணயிக்கு மத்தியாயம்.

## இருபத்திரண்டாம் விண்ணப்பம்.

மா— "விஷயங்களின் வரிசையை ஆராய்ந்ததில் ஸ்வஹிததத்துவத்தை அறிந்தவர்களுக்கு வைராக்யம் ஸுலபம்" என்று பிரமனால் ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவனுக்கு பராக்ரமம் உள்ளவர் ஸேனையைச் சூறையாடினவன் விண்ணப்பம் செய்தான்.

அநந்யஜன ஸுலபா! உலகத்தில் மனிதர்களில் சப்தாதி விஷயங்களைவிட்டு உன்னையே விசேஷமாய் நம்பினவர்கட்கு நீ ஸுலபனென்று அறிந்த மஹாத்மாக்கள் உன் திருவடிகளைச் சார்ந்து தங்களுடைய பாரத்தை இறக்கி ஸுகத்திலிருப்பர். இன்னும் சிலர், பண்டிதரென்று சொல்லிக்கொள்ளுமவர், சரீரம் உள்ளவரையிலும் விஷயங்களை விடக்கூடாமையால் உன்னுடைய பஜனை துர்க்கடமென்பர். அவர்கள் சொல்லும் சில குயுக்திகள் உள. அவையெப்படியெனில் :— விஷயங்களை விட்டுவிடுதலென்பது இருவகை. விஷயங்களனைத்தையும் நாசம்செய்வது ஒன்று; அல்லது விடில், விஷயங்களிருந்தாலும் அவற்றில் ஒட்டாமலிருப்பது மற்றொன்று. இவைகளில் நீ உண்டுபண்ணின விஷயங்களனைத்தையும் நாசம்செய்தால் உன் உடைமைகளைக்கெடுத்த ஸ்வாமித்ரோஹம் வரும். விஷயங்களில் ஒட்டு இல்லாமலிருப்போமென்றால் இந்த ப்ரக்ருதி மண்டலத்தை விட்டுப் போகாமையாலேயே ஸாத்யமன்று. ஊரிலிருக்கும் வனிதாதி விஷயங்களைவிட்டு வனத்தில் இருந்தாலும், நீரில் முழுகி இருந்தாலும், ஆதிபரதனைப்போலும், ஸௌபரியைப்

போதும் மான்குட்டி, மீன் முதலிய விஷயங்கள் ஸம்ஸார பந்தத்தை உண்டுபண்ணாமல் விடாது. ஆகையால் விஷயத்தை விடுதல் அஸாத்யமென்பர். இவர்கள் ஒருதடவையும் வேதாந்தத்தை அறிந்தவரென்னும் ஒரு பெரியோர் அடிநிழலிலிருந்து பொழுதைக் கழித்தவரன்று. பெரியோர் உபதேசத்திலிருந்து அறிந்தால் விஷயபரித்யாகம் மிகவும் ஸுலபமாயிருக்கும். அதெப்படியென்றால்—ஆளொருவன் அரசனை எண்ணாமல் அவன் பொக்கிஷத்திற்குச் சேரவேண்டிய நாடு நகரங்களிலிருக்கும் வஸ்துக்களைத் தனக்கென்று கூட்டிக்கொண்டு தன் இச்சை வந்தபடி சில வழித்துக் கெடுத்தால் பொருளாசைக்காரனும், ஸ்வாமித்ரோஹியுமாவான். அப்படியல்லாமல் தான் ஆள் என்னும் நினைவுடன் கூடி அவன் ஸேவைக்கென்று ஸம்பாதித்த அனைவற்றையும் அப்பொழுதைக்கப்போதே ஒப்புவித்து அவன் ஸாப்பிட்டு மிகுதியான அம்ருதான்னத்தை உண்டு, அவன் உடுத்துக் களைந்த பீதகவாடையையும் ஆபரணங்களையு மணிந்து, ஐச்வர்யத்தையடைந்து பெருமைப்பட்டால் நிஷ்ப்ருஹனும், விச்வாஸியுமாவான். ஆக உன் கைங்கர்யத்தைக் கருதும் தன் ஸ்வரூபத்தை யறியாமல், தான் ஸ்வதந்த்ரன் என்னும் ஜ்ஞானத்தினால், தன்னுடைய போகார்த்தமாக விஷயங்களை அனுபவிப்பவனுக்கு விஷயத்யாகமும் உன்னிடத்தில் பக்தியும் கூடாது. அப்படியன்றிக்கே தான் உனக்கு ஆளென்னும் நினைவுண்டாய், வர்ணாச்ரமமென்னும் உன் கைங்கர்யங்களில் தன் ஆற்றலுக்கேற்றவகையில் வஞ்சனையில்லாமல் நடந்துகொண்டு வேதசாஸ்த்ரி

ரங்களென்னும் ப்ரமாணங்களோடு நீ கருணித்த விஷயங் களை யனுபவித்தால் அது உன் கைங்கர்யமல்லாமல் விஷயா ஸக்தியன்று. இப்படி நடந்துகொண்ட வஸிஷ்ட விச்வா மித்ரர்கள் க்ருஹஸ்தாச்ரமத்திலிருந்து நித்யப்ரம்ஹசாரி யும்; நித்யோபவாஸியுமெனப்பட்டார்கள். ஆகையால் நீ அவர்களுக்கு ஸுலபனெனப்படுவது. விஷயவிரக்தியைக் கொடுத்து உன்னிடத்தில் பக்தியை எனக்குக்கொடுப்பது, எனக்குக்கொடுப்பது, அநந்யஜனஸுலபா ! ஸ்ரீயதுசைல வல்லபா !

# இருபத்துமூன்றும் விண்ணப்பம்

பா— "முக்தி வழிக்கு ஜ்ஞானிகள் மதத்தில் கேவலகர்மம் தகுதியற்றது" என்று அறிகதோரில் அறிந்தவன் ப்ரீதியுடன் ஸுகுமாரமான திருவடிகளில் பணிந்து ஹரிக்கு விண்ணப்பம் செய்தான்.

ஸகல கர்மபலப்ரதா! கர்மமென்பது மானிடர் செய்யும் கார்யம். அது ஸத்கர்மம், துஷ்கர்மமென்று இருவகைப்படும். ஸத்கர்மமென்பது உன் நிரூபமான வேதசாஸ்திரங்களில் புகழ்ப்பெற்ற நடத்தை. ஸத்கர்மத்தால் புண்யமும், துஷ்கர்மத்தால் பாபமும் உண்டாகும். புண்யமென்பது உனது உகப்பு. பாபமென்பது உன் கோபம். புண்யத்தினின்று ஸுகமும் பாபத்தினின்று துக்கமுமுண்டாகும்.

அந்த ஸத்கர்மமும் நித்யமென்றும், காம்யமென்றும் இருவகைப்படும். நித்யமென்பது இந்த வர்ணத்தார், இவ்வாச்ரமத்தார், இதை நடத்தவேண்டும், இதை விடவேண்டும் என்று நீ ஸ்வருசியில் கட்டுப்படுத்தின கார்யம். இதை உன் பக்தர் நீ ஸர்வஜ்ஞன், ஸர்வசக்தி, பக்த வத்ஸலன் என்று உன்னையே விசேஷமாய் நம்பி, உன் குணங்களுக் கடிமைப்பட்டு, உன் கட்டளையைக் கடைப்பிடிகதது, உன் கைங்கர்யத்தி லீடுபடுவதே ஸ்வயம்பலமென்று கொண்டு, செய்து மோக்ஷத்தை யடைவர்.

காம்யமென்பது, உன் மனம் வாராதிருந்தும் அவரவர் ஆசைப்படுகிறார்களென்ற நிர்ப்பந்தத்தினால் இந்தப் பலத்தை யுத்தேசித்தவன் இக்கர்மத்தைச் செய்வதென்று உதாஸீன புத்தியில் நீ கட்டுப்படுத்தியது. பலத்தில் ஆசையால் இந்த காம்யகர்மங்களை ஸாங்கமாய் ஆசரித்தவர்க

ளுக்கு இவ்வுலகில் ப்ருத்வீபதித்வம் (அரசு) வரையிலுமான ஐச்வர்யமும், பரத்தில் ஸத்யலோகாதிபத்யம் வரையிலுமான ஐச்வர்யமுமாம்.

துஷ்கர்மமென்பது நீ ஆஜ்ஞாபித்ததை விடுவதும், கழித்ததை நடத்துவதுமென்று இருவகைப்படும். இதி லிருந்து இவ்வுலகில் சித்திரவதைவரையிலுமான துக்கமும், பரத்தில் மஹாநரகத்தில் விழுவது வரையிலுமான யாதனை யும் உண்டாகுமென்று வேதாந்த மறிந்தோரான பெரியோர் களைக் கேட்டறிந்தேன்.

இதன் நிலைமை விசாரித்ததில், காம்யகர்மமும், துஷ் கர்மமும் உன் மனதிற்கு வாராமையால் உன்னடியைச் சேர வொட்டாமல் ஸம்ஸாரமென்னும் சிறைவீட்டில் தள்ளிக் கால்கட்டாயிருப்பதால், முறையே பொன், இரும்பு கால் விலங்குகளாயிருக்கின்றன. ஆகையால் இவ்விரண்டு வகை பந்தத்திற் றுள்ளும் அகப்படாமல், உன்னையே விசேஷமாய் நம்பி, நீ உகந்தருளி நியமித்த கைங்கர்யத்தைச் ஸந்தோஷ மாய்ச்செய்து, உன் உகப்பென்னும் பெருமையை யடையும் பேற்றை எனக்கருளுவது, அருளுவது, அநந்யஜனஸுலபா! ஸ்ரீயது சைலவல்லபா!

---

# இருபத்துநான்காம் விண்ணப்பம்

பா— "உதாஸீனத்தோடு மற்றவையையும்[1] ஆதரத்தோடு முக்திபதத்தையும் நீ கொடுப்பாய்," என்று யாதவ நாராயணனென்னும் விருதுள்ளவன் அன்புடன் அந்த தேவ தேவனது திருவடியில் செப்பினன்.

ஸர்வாபீஷ்டப்ரதா![2] ஜீவாத்மர் ப்ரக்ருதியில் ஆழ்ந்திருப்பதால் தம்தம் ஸ்வரூபத்தை மறந்து தாம் ஸ்வதந்த்ரரென்றெண்ணி, தேகமே தாமென்று மயங்குவர். இந்த அஜ்ஞானம் அவித்யையெனப்படும். தாம் ஸ்வதந்த்ரரென்பதால் தம் தம் ஹிதத்தைச் செய்வோமென்று கார்யாகார்யத்தை[3] யறியாமல் தங்களிச்சை வந்தபடி நடப்பர்; அது கர்மமெனப்படும். அக்கர்மமும், யஜ்ஞமும், தானம், தவம் முதலான ஸத்கர்மமென்றும், அக்ருத்யகரணம், க்ருத்யாகரணம்[4] முதலான பாபகர்மமென்றும் இருகூறுவிருக்கும். இப்படியான பலதிறப்பட்ட கர்மங்களில் பலங்கொடுக்கும் கர்மங்களை யாசரித்திருப்பானொருவனுக்குக் கர்மத்திலப்யாஸ மேற்படுவதால், தான் நடப்பிக்க வேண்டுமென்ற நினைவில்லாமல் மறந்திருந்த காலத்திலும், தன்னையறியாமலே முன் நடந்த கர்மத்தில் ப்ரவ்ருத்தி பிறக்கும். இது வாஸனையெனப்படும். மேலும், தான் நடத்தின கர்மத்தில் மேலும் மேலும் தான் செய்வனென்ற ப்ரீதியுண்டாகும்; இது ருசியெனப்படும். இப்படி ருசி கூடி நடந்தவர் அந்த கர்மத்தின் பலத்தை உண்ண அநுகுணமாய் நீ கொடுத்த தேவ மனுஷ்யாதி சரீரத்தில் புகுவர்; இது ப்ரக்ருதி ஸம்பந்தமெனப்படும். இப்படி சரீரமே ஆத்மா என்று மயங்குதல் முதலான அவித்யையும், அந்த மயக்கத்தால் நடத்தும் நடத்தையென்னும் கர்மமும், அந்த நடத்தையை பற்றி

கரித்து தானறியாமலிருந்தபொழுதும் ப்ரவர்த்திக்கும் வாஸனையும், அந்த நடத்தையில் ப்ரீதியென்னும் ருசியும், அந்த ருசியோடு செய்த கர்மத்தின் பலமான சரீரஸம்பந்தமும், இவையே ஜன்மஜன்மங்களில் சுற்றிச்சுற்றி வருவதனால் ஸம்ஸாரசக்ரமென்பது. இந்த ஸம்ஸார சக்ரத்தில் கஷ்டத்படும் ஜீவாத்மர் அவரவர் நடத்தையிலிருந்து ஸ்வரூபமழியாதபடி நீ அவர்மேல் தயைசெய்து. ஸுகதுக்கானுபவத்திலிருந்து அவரவர் கர்மத்தைக் கழித்துக்கொண்டு ஒருகால் உன்னைப் பூஜித்து முக்தியை யடைவதற் கநுகுணமான மனுஷ்ய சரீரத்தை யுண்டுபண்ணுவதால், நீ ஸம்ஸாரிகளில் தயையுள்ளவனென்பது. இப்படியிருக்கும் ஸம்ஸாரிகளில் சிலருக்கு வைராக்யமும் பிறந்து முமுக்ஷுக்கள் எனப்பட்டு அவர்களுக்கு மோக்ஷோபாயத்தை ஸித்தப்படுத்திக்கொடுப்பது நீ யாதலால், நீ முமுக்ஷுக்களில் தயை உள்ளவனென்பது. நித்யமுக்தர்களுக்கும், மோக்ஷத்தை பெற்றவர்க்கும் நிரவதிகாநந்தத்தை இடைவிடாமல் வளர்த்துவதால் முக்தர்களிடத்திலும் தயாளுவென்பது. இப்படி ஸர்வஸமனென்னும் நீ உன் அருளாமுதக் கடலலைகளினால் என்னுடைய துஷ்கர்மங்களென்னும் கர்மங்களைக்கழித்து உன்னவனென்னும பெருமையை உதபவிப்பது, உத்பவிப்பது, அநந்யஜந ஸுலபா! ஸ்ரீயது சைலவல்லபா!

---

## குறிப்புகள்

1. மற்றவைவையும் :—மோக்ஷமல்லாத வேறு பலங்களையும்.
2. ஸர்வாபீஷ்டப்ரதா :— மிகப் பிரியமான எல்லா வற்றையுமளிப்பவனே.
3. கார்யாகார்யம் :—செய்யத்தக்கதும், தகாததும்.
4. அக்ருத்யகரணம், க்ருத்யாகரணம் :— செய்யக் கூடாததைச் செய்வதும் செய்யவேண்டியதை விடுவதும்.

# இருபத்தைந்தாம் விண்ணப்பம்.

பா— "பலவகையில் பலனுண்டாவது உன்னின்றே, வேறொன்றினின்றுமல்ல, இது திண்ணம்," என்று கல்யாண தீர்த்தத்தை[1] நிலையாய்க்கொண்டவனடியில் அயர்ச்சியின்றி ஸத்யபராக்ரமன் உரைத்தான்.

ப்ரபந்நஜனபரிபாலகா![2] காப்பதென்பது யோகக்ஷேமங்களைச் சுமந்து நடத்துவது. யோகமெனில் முன்னடையாத ஐச்வர்யத்தைக் கோர்த்துக்கொடுப்பது. க்ஷேமமெனில் முன்னமேயிருக்கும் ச்ரேயஸ்ஸுக்களைக் காப்பாற்றுவது. இவை இரண்டிற்கும் நீயே ஸ்வதந்த்ரகர்த்தா[3]. மற்றைய காரணங்களெல்லாம் உன்னதீனமெனப்படும் உபகரணங்கள். இந்த நிலையையறியாமல் சிலர் சாஸ்த்ர தாத்பர்யத்தில் மயங்குவர். அவர்களில் கேவலகர்மடர்[4] கர்மத்திலிருந்தே பலன் என்றும், இதரதேவதைகளை விசேஷமாக ஆராதிப்போர் தேவதாந்தரத்திலேயே யென்றும், சோதிடவறிஞர் க்ரஹானுகூலம் பொருந்திய காலத்திலிருந்தேயென்றும், லௌகிகர் புருஷப்ரயத்னத்திலிருந்தேயென்றும், நாஸ்திகர் காரணமொன்றுமின்றிக்கே தன்னின்று தானேயென்றும் சொல்லுவர். இந்த பக்ஷங்களெல்லாம் யுக்திவிருத்தங்கள்.

அங்ஙனமேனெனில்:—கர்மமென்பது தாம் நடக்கும் நடத்தை. அது அசேதனமாயிருப்பதால் புருஷன் ஆசைப்படும் பலத்தையறிந்து கொடுக்க முடியாது. தேவதாந்தரமும் சேதனமானாலும் தன் யோகக்ஷேமத்திற்குன்னை வேண்டுவதனால் ஸ்வாதந்த்ர்யத்தில் பலனன்று. புருஷப்ரயத்னமே பலஸாதகமாகில், காரணமொன்றில்லாதிருந்தாலும் எப்போழுதும் எல்லாருக்கும் எல்லா பலனுமாக

வேண்டும். ஆகையாலிவையொன்றும் பலத்தைத் தருவன வல்ல.

மேலும், உலகத்தில் ஆட்களை ரக்ஷிக்குமரசனுக்கு ஆட்கள் செய்யும் பணிவிடைபோல் கர்மம்; ஆள் செய்த பணிவிடையை அரசனுக்கும் அரசன்கொடுத்த வூதியத்தை ஆட்களுக்கும் சேர்ப்பிக்கும் மத்யஸ்தன்போல் தேவதாந்தரங்கள்; வூதியத்தைக் கொடுப்பதற்கு குறிப்பிட்ட கூ போல் காலம்; அரசனது பணிவிடையில் கைகால்களையாட்டுவதுபோல் புருஷப்ரயத்தனம்; ஆளுடையவனுடைய உகப்பையறியா வூழியனைப்போலத் தன்னின்றுதானே பலனென்பது. இப்படியிருக்கத் தான் செய்யும் பணிவிடையிலேயே பிழைப்பேனென்றும், மத்யஸ்தனாலேயே வளர்வேனென்றும், ஏற்படுத்தின நாள் வந்தால் சம்பளம் வருமென்றும், விஷயங்களையொட்டித் தன்னுடைய வியர்வையின் பலத்தினாலேயே தான் வளர்வேனென்றும், காரணமில்லாமல் பெருமையடைந் திருக்கிறேனென்றும் எண்ணுகின்றவர்கள் ஆளுடவனுடைய வூழியத்தில் நன்றாய் நின்று கடைவாயிலறியாராவார்.

ஆகையால் இந்த மயக்கங்களைவிட்டு உன்னாலேயே பிழைப்பேனென உன்னை விசேஷமாய் நம்பினவர் எப்பேர்ப்பட்டவராயினும் அவர்களது யோக க்ஷேமங்களைச் சுமந்து நடத்துவேனென்று நீ முன்னமே அர்ஜுனனுக்குக் கூறினதை மறவாமல் இப்பொழுதென்னை ரட்சிப்பது, ரட்சிப்பது, அநங்யஜனஸுலபா! ஸ்ரீயது சைலவல்லபா!

---

குறிப்புகள்

1. கல்யாணதீர்த்தம் :—திருநாராயணபுரத்திலுள்ள கல்யாணி என்னும் முக்ய தீர்த்தம்.

2. ப்ரபன்னஜன பரிபாலக:—ப்ரபத்தி செய்தவர் களைக் காப்பவனே.

ப்ரபத்தியாவது:— "இப்படிப்பட்ட முக்யஸாதக மான பக்தியாதல், கர்மஜ்ஞானத்தில் பரம்பரா ஸாதநத் தாலே யாதல், அதற்கு உறுப்பான ஆத்மாலங்காரங்கள் ஒன்றுமில்லாமையாலும் உத்தரோத்தரம் ஸம்பாதிக் கைக்கு அதிகாரமாதல், இச்சையாதல், இல்லாமையாலும் மற்ற அனுகூலபரிகாரங்களொன்று மின்றியே விபரீத பரி காரங்களில்லாததின்றியே இருக்கையாலும், இப்படி இருந் தோமேன்று அநுதாபங்கூட வின்றிக்கே த்வேஷம் பெருத் திருக்கையாலும், அல்பஜ்ஞதையாலே அறியவல்லதொன் றின்றியே விஷயாக்ராந்தசித்ததையாலே தன்வசமின் றியே, அல்பகால வர்த்திபாதையாலே ஒன்றும் செய்கைக்கு அவஸரமின்றியே இருக்கையாலும், தேச காலங்கள் பேதித் தாலும், 'நம்மால் எம்பெருமானை ஸாதிக்கப்போகாது,' ஆகையாலே எம்பெருமானை இழந்தோ மித்தனையாகாதே என்று சோகிக்கிறவன் ப்ரபத்திக்கு அதிகாரி"—அப்பன் ஸ்ரீனிவாஸாசார்யா ரருளிச்செய்த அஷ்டச்லோகிவ்யாக் யானம்.

3. ஸ்வதந்த்ரகர்த்தா:—இஷ்டப்படி நடத்துபவன்.

4. கேவலகர்மடர்:— பொருளறியாமல் கேவலம் கர்மாசரணையிலேயே ஆழ்ந்தவர்கள்.

---

# இருபத்தாறும் விண்ணப்பம்.

பா—"எல்லாவற்றையும் ரக்ஷிப்பவன் நீ ஒருவனே, வேறு யாரும் ஸாமர்த்தியமுள்ளவரன்று"—என்று பத்மநாபன் திருவடிகளில் பெரிய பகைவர் ஸேனையை வேட்டையாடுவோன் அன்புடன் உரைத்தான்.

ஸர்வரக்ஷகா![1] நீ ஒருவனே அனைவரையும் காப்பாற்றுபவன். நீயல்லாமல் மற்ற தேவதாந்தரங்களும், தகப்பன் முதலான பந்துக்களும், தனதான்யாதி ஐச்வர்யங்களும் ரக்ஷகரல்லர். அதெப்படியெனில்—நான்முகன் ரக்ஷகனன்றென்பது தன் தலையைப் போக்கடித்துக் கொண்டதும் அல்லாமல் வேதாபஹாரண[2] காலத்தில் செய்வதறியாமல் மோசம் போனதால் தெரியவந்தது. ருத்ரனும் ரக்ஷகனன்று என்பது வ்ருகாஸுரனுக்கு வரமளித்து அதனால் கஷ்டப்பட்டதுமல்லாமல் கையில் அஸ்த்ரம் பிடித்துக்காத்திருந்தும் தன்னெதிரில் தோள்கள் கத்தரிக்கப்பட்டதனால் கூக்குரலிடும் வாணாஸுரனை விட்டுத் தோற்றோடினதனாலும் தெரியவந்தது. இந்திராதி தேவதைகளும் ரக்ஷகரல்லரென்பது ஹிரண்யகசிபு, பலி, வ்ருத்ராஸுரன் முதலானோர் உபத்ரவங்களிலிருந்து தத்தம் நிலைகளைவிட்டு விரைந்தோடியதில் தெரிந்தன. தகப்பனும் ரக்ஷகனன்று என்பது ஹிரண்யகசிபுவினால் தெரியவந்தது. உடன்பிறந்தவர்களும் ரக்ஷகரல்லரென்பது வாலியால் தெரிந்தது. பிள்ளைகளும் ரக்ஷகரல்லரென்பது கம்ஸனாலும், பதிகளும் ரக்ஷகரல்லரென்பது பாண்டவர்களாலும், தனதான்யாதி ஐச்வர்யங்களும் ரக்ஷகங்களல்லவென்பது தாயாதிகள், பகைவர், நெருப்பு, திருடர், வெள்ளம் முதலியவற்றாலழிவதிலிருந்தும் தெரியவந்தது. இப்படித்தாம் ரக்ஷகரல்லாமலிருந்தும் அற்பபுத்திகளுக்கு ரக்ஷ

கங்கள் போலத் தோன்றி மோசஞ்செய்வதால் (இவை) ரக்ஷகாபாஸங்களெனப்படும்[3] அப்படியன்றிக்கே நான்முகனுக்கு வேதங்களை மீட்டுக் கொணர்ந்தளித்தும், ருத்ரனுக்கு வ்ருகாதி உபத்ரவங்களைப் போக்கடித்தும், இந்த்ராதிகளுக்குத் தான வேந்த்ரர்களை வென்று அவரவரதிகாரங்களில் நிறுத்தியும், ப்ரஹ்லாதனுக்கபயத்தையும், ஸுக்ரீவனுக்கு ராஜ்யத்தையும், உக்ரஸேனனுக்கு அரசதந்த்தையும், த்ரௌபதிக்கு அபிமான ரக்ஷையையும் சேர்த்துக்கொடுத்து ஸர்வரக்ஷகனெனப்பட்டுப் பிரஸித்தியைப்பெற்ற உன்னைச் சரணடைந்து உன்னுடைய மெல்லடிகளே உபாயமும் உபேயமுமென்று விசேஷமாய் நம்பி மற்றெல்லாவற்றையும் துறந்து அநந்யகதி[4] யெனப்பட்டேன். என்னை ரக்ஷிப்பது, ரக்ஷிப்பது, அநந்ய ஜனஸுலபா! ஸ்ரீயது சைலவல்லபா!

---

## குறிப்புகள்

1. ஸர்வரக்ஷகா—அனைத்தையும் ரக்ஷிப்பவனே! அதாவது அநிஷ்டங்களைப்போக்கி இஷ்டங்களைத் தருகை.

2. வேதாபஹரணமாவது — வேதங்களைப் பறிகொடுத்துப் பிரமன் தவித்து நின்றது. இவ்வாபத்தைப்போக்கினது ஹயக்ரீவாவதாரத்தில். எம்பெருமான் ஆதிகாலத்தில் நான்முகனைப்படைத்துப் பிரளயகாலத்தில் மறைந்துகிடந்த வேதங்களைப் பிரகாசப்படுத்தி அவனுக்குபதேசித்து அனுக்ரஹிக்க, அப்பிரமன் வேதங்களைக் கண்ணுகக்கொண்டு விச்வஸ்ருஷ்டியைச் செய்ய ஆரம்பித்தபோது பகவானிடத்தினின்று ரஜஸ் தமோகுணங்களின் வடிவமாகத் தோன்றிய மது கைடபரென்னுமிரண்டஸுரர்கள் அந்த வேதங்களையபகரித்துக்கொண்டு கடலினுட் புகுந்து பாதாளம் சென்று

னர். வேதங்களைப் பறிகொடுத்த நான்முகன் இன்னது செய்வதென்று தோன்றாது திகைத்து நெடுங்காலம் 'கண்ணிழந்தேன், தனமிழந்தேன்' என்று கதறியழுது பிறகு சிறிது தெளிந்து எம்பெருமானைத் துதிக்க, அவரும் ஹயக்ரீவரூபியாக எழுந்தருளிப் பாதாளம்சென்று மது கைடபர்களை ஸம்ஹரித்து வேதங்களை மீட்டுவந்து பிரமனிடமளித்தார்.

'முன் ஒருகல்பத்தின் அந்தத்தில் பிரமன் துயிலுகையில் அவன் முகங்களினின்றும் வெளிப்பட்டுப் புருஷரூபத்துடன் உலவிக்கொண்டிருந்த நான்கு வேதங்களையும் சோமுகனென்னும் கொடிய அஸுரன் கவர்ந்து கொண்டு பிரளய வெள்ளத்துள் மறைந்து செல்ல, எம்பெருமானதனை யுணர்ந்து ஒரு பெருமீனுகத்திருவவதரித்து அப்பெருங் கடலினுட் புகுந்து அவ்வஸுரனைத் தேடிப்பிடித்துக் கொன்று வேதங்களை மீட்டுக்கொணர்ந்து பிரமனிடம் கொடுத்தருளினன்'—என்ற வரலாறு முண்டு. இவ்வஸுரன் பெயரை ஹயக்ரீவனென்பாரு முண்டு. மத்ஸ்யாவதாரம், ஹம்ஸாவதாரம், ஹயக்ரீவாவதாரம் என்ற மூன்றவதாரங்களால் எம்பெருமான் பிரமனை வேதாபஹரணமாகிற ஆபத்தில் நின்றும் விடுவித்தான். புராணபேதத்தாலும் கல்ப பேதத்தாலும் கதைகளைச் சிறிது வேறுபடக் கூறுதலுண்டு. (ரத்நப்ரபா.)

3. ரக்ஷகாபாஸம்—ஆபாஸம் எனில் பொய்த்தோற்றம். உதாரணமாக, ஆபாஸதர்மம் எனில் வஸ்துதः அதர்மமாயிருந்து தர்மம்போலே தோற்றுவது. அப்படியே ரக்ஷகத்வமும்.

4. அநந்யகதி—வேறுபுகலொன்றில்லாதவன்.

---

# இருபத்தேழாம் விண்ணப்பம்.

பா—"தன்னிருப்பில் தான் ஏக்கமற்று உன்னிருப்பை யறிபவன் வீடு பெறுவன், இது திண்ணம்" என்று துணிந்து வரும் வீரராம் பகைவரைச் சிறைபடுத்துபவன் உயர்ந்த படிமையுடையானுக்குப் ப்ரீதியுடன் சொன்னான்.

அகில லோகசரண்யா![1] நீ அடைக்கலம் புகுந்தார் இடரைக் களைந்து அவர் விரும்பின அளிப்பாய். எல்லாம் (நம்மையும் நம் ஹிதா ஹிதங்களையும்) அறிவதால் ஸர்வஜ்ஞனென்றும் அறிந்தபடி செய்து முடிப்பதால் ஸர்வசக்தியும் என்று பெரியோர்களால் கேட்டு ஆசையால் உன்னை யடைக்கலம் அடைவேனென முயற்சித்தேன். இப்பொழுதும் என்னுடைய தோஷங்களை யெண்ணிப் பின்வாங்குவேனெனில், உன்னுடைய குணங்கள் என்னுடைய பயத்தைத் தீர்த்து, பலவந்தமாய் இழுத்துக்கொண்டு போய் உன் திருவடி நிழலில் நிறுத்துகின்றன. அதெங்ஙனேயெனில்—அநாதி காலமாய் இதுவரையிலும் நான் செய்த அநேகமான பாபங்களை நினைத்துப் பின்வாங்குமளவிலேயே அடைந்தவர் தோஷத்தை போக்யமாகக்கொள்ளும் உன் வாத்ஸல்யகுணம் முன்வந்து என்னைக்கச்சைகட்டுவிக்கிறது. அறிவீனனும் அசக்தனுமானதால் உன் சித்தமுவந்தபடி சிறிதுகூட நடக்கமாட்டாத என்னை நீ எந்த வகையில் கைபிடிப்பாயென்றெண்ணித் திகைக்குமளவில், நீ உடையனும் நான் உடைமையும் என்கிறதால் உடையவன் உடைமையைக் காப்பாற்றுவதற்குக் கூலியில்லை என்கிற ஸ்வ-ஸ்வாமி-ஸம்பந்த 2 ஜ்ஞானம் அபயத்தைக்கொடுக்கிறது. அகில ஹேயப்ரத்

யனீகனென்னும் உன் மேன்மையையும், ஸகல ஹேயாஸ்பத மான என் கீழ்மையையும் பார்த்து, உனக்குமெனக்கும் சேர்க்கையில்லை யென்று பின்வாங்குமளவிலேயே, பெரியவனு யிருந்தும் தாழ்ந்தவர்களோடு வாசியறக்கலந்து ஸந்தோஷப் படுத்தும் உன் ஸௌசீல்யகுணம் என்னை வரும்படி இழுக் கிறது. ப்ரம்மாதிகளுக்கும் அவாங்மனஸகோசர[3]னென் னும் உன்னை நான் காண்பதரிதெனப் பின்வாங்குமளவில், யது சைலதீபமெனப்பட்டு ஸகலஜனநயனானந்தமான உன் திவ்ய மங்கள விக்ரஹம் என்னை யாட்கொள்கின்றது. இப்படி யாகையால் ஞானபக்தி வைராக்யாதி ஸத்குணஸம்பன்னர் களுக்கும், அகிஞ்சனர்களும்[4] அநந்யகதிகளுமான[5] என்னைப்போன்றவர்களுக்குமொரே ரக்ஷகமாய் ஸர்வஶரண்ய ன் எனப்பட்ட உன்னிடம் அடைக்கலம் புகுந்தேன். என்னைக்கைபிடித்துக் காப்பாற்றுவது, காப்பாற்றுவது, அநந்யஜன ஸுலபா! ஸ்ரீயது சைலவல்லபா!

---

## குறிப்புகள்

1. அகிலலோக சரண்யா!—நம்முடைய நன்மை தீமைகளையும் பாராதே ஸமஸ்த லோகங்களையும் ரக்ஷிக்கக் கூடியவனே.

2. ஸ்வ-ஸ்வாமி-ஸம்பந்தம் — உலகத்தில் பொருளை யுடையவன் அதைத்தனது இஷ்டப்படி அனுபவிக்கவும், பெட்டியில் வைத்துப் பேணவும், பிறர்க்குதவவும் தானே ஸ்வதந்த்ரனாய் எப்படி உபயோகிக்கிறானோ, அப்படி இவ் வாத்மாவை ஈச்வரனும் ஒருபடி வைக்கவும் தள்ளவும், எடுக்

னவும் ஸ்வதந்த்ர பாத்யதை யுடையவன்; ஜீவாத்மாவும் அப் பொருள்போலவே ஸ்வாதந்த்ர்யமின்றி அவனனுகூலத் துக்கே கடமைப்பட்டு என்றும் வாழக்கூடியவன்.

3. அவாங்மனஸகோசரன் — வாக்குக்கும் மனதிற்கு மெட்டாதவன்.

4. அகிஞ்சனர் — ஒரு ஸாதனமுமில்லாதார்.

5. அநந்யகதிகள் — வேறுகதியற்றவர்.

## இருபத்தெட்டாம் விண்ணப்பம்.

பா— "மாயையையும் அதன் கார்யங்களையும் இந்த இடத்தில் விடுவித்து நீ ப்ரார்த்தனையை நிறைவேற்றுவாய்" என்று, அந்த மாயாவிகளான மராட்டியரை வென்று அதீன மாக்கிக்கொண்டவன் மாயாதீதனுக்குத்[1] தண்டம் ஸமர்ப் பித்து விண்ணப்பித்தான்.

ஸகலஜீவதயாபரா! ஜீவாத்மர் பலராய் நித்யரென்றும், முக்தரென்றும், பத்தரென்றும் மூன்றுபடியாயிருப்பர். அவர்களில் நித்யர் உன் ஸத்ய ஸங்கல்பத்தால் ஒரு காலமே னும் ப்ரக்ருதி ஸம்பந்தமில்லாமல் எப்பொழுதும் உன் னுடைய ஸன்னிதியிலிருந்து உன் கல்யாண குணங்களை யனுபவித்துக்கொண்டே உன்னுடைய பலவித கைங்கர்யங் களிலீடுபட்டிருப்பர். முக்தரென்போர் அநாதிகாலத்தி லிருந்து ஸம்ஸாரத்திலிருந்து உன் கடாக்ஷத்தினால் ஸத்வ குண ஸம்பன்னராய் முக்தியை யடைந்து நித்யரைப்போல் உன்னுடைய கைங்கர்யபரராயிருப்பர். பத்தரென்பார் ஸம்ஸாரத்தில் கட்டுப்பட்டு ப்ரக்ருதி பாதந்த்ரராயிருப்பர்.[2] இந்த பத்தர்களும் ஸம்ஸாரிகளென்றும், முமுக்ஷுக்களென் றும் இருவகைப்பட்டிருப்பர். ஸம்ஸாரிகள் உன்னை மறந்து விஷயானுபவத்தில் ஆஸக்தியுள்ளவராயிருப்பர். முமுக்ஷுக் களோ உன் கடாக்ஷத்தினால் விஷயங்களில் வைராக்யம் பிறந்து அதனாலிந்தப்ரக்ருதி ஸம்பந்தத்தை நீக்கவேண்டு மென்று உன்னையடைக்கலம் புகுவர். இந்த நித்யர்களுக்கும் முக்தர்களுக்கும் அபேக்ஷிதமான உன் கைங்கர்யத்தையும், முமுக்ஷுக்களுக்கு அபேக்ஷிதமான மோக்ஷத்தையும் நீயே மனமுவந்து கொடுத்தருள்வாய். ஸம்ஸாரிகளுக்கபேக்ஷிதம் எனப்படும் இஹபர ஐச்வர்யங்களை அவரவர் தொழும்

தேவதாந்தரங்களின் அந்தர்யாமியாயிருந்து அருள்வாய். இப்படி நீ ஸர்வ ஆத்ம வர்க்கங்களிலும் தயைசெய்து கொண்டிரா நிற்க, நான் இன்று உன்னைப்பிரார்த்திக்கும் சாபல்யத்தைப் பொறுத்து, என் பிரார்த்தனையை நிறை வேற்றவேண்டும், நிறைவேற்றவேண்டும், அநந்யஜன ஸுலபா! ஸ்ரீயது சைலவல்லபா!

---

## குறிப்புகள்

1. மாயாதீதன்—(1) மாயையை நீக்கிப் பார்க்கப் படுவோன்.

   (2) மாயைக்கு விலக்ஷணமானவன்.

2. ப்ரக்ருதிபாதந்த்ரர்—ப்ரக்ருதிக்குட்பட்டவர்.

---

## இருபத்தொன்பதாம் விண்ணப்பம்.

பா— "உன்னுடைய திவ்ய மங்கள விக்ரஹம், ஸ்ரீலக்ஷ்மிக்கு நிலை, ஸித்தபோக்யம் 1, நிரவத்யம் 2," என்று செல்வாராயர் 3 திருவடித்தாமரைகளில் தண்டம் ஸமர்ப்பித்து, தரணீவராஹனென்னும் விருதாளி சொன்னான்.

திவ்யமங்கள விக்ரஹா! பிறக்கும் பொழுது உன்னுடைய கடாக்ஷத்தைப்பெற்று ஸாத்விகரானவர்கள் ப்ராக்ருதமான சப்தாதிவிஷயங்கள் தோஷங்களென்றறிந்து அவைகளில் ப்ரீதியைவிட்டு, பரமபோக்யமான உன்னுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை அபேக்ஷிப்பர். குமதிகள் 4 சிலர் உனக்கு விக்ரஹமில்லையென்று அபலாபனம் செய்வர். அவர்கள் சொல்லும் குயுக்தி5களெப்படியென்றால்—பரமாத்மனுக்குச் சரீரமுண்டாகில் ஜீவாத்மனைப்போல் கர்மவச்யனாவன் 6; சரீரமே ஆத்மாவென்ற மயக்கத்தால் ஸம்ஸாரியுமாவான்; சரீரமுள்ளவனுக்கு இந்த்ரிய ஸந்நிக்ருஷ்டவஸ்து 7 ஸாக்ஷாத்காரமன்றி 8 ஸகலவஸ்து ஸாக்ஷாத்கார மில்லாமையால், ஸ்வாதீனமாய் இருக்கும் காலத்தில் குறிக்கப்பட்டிருக்கும் காலத்திலல்லாமல் எண்ணியதெல்லாவற்றையும் செய்யக் கூடாமையாலே அற்பசக்தியுள்ளவனுமாவான். ஆகையால் பரமாத்மனுக்குச் சரீரமில்லை எனச்சொல்வர். இந்த பக்ஷம்9 யுக்தாயுக்த விசாரம்10 செய்யுமறிஞருக்கு ஒவ்வாது. அஃது எங்ஙனேயெனில்—தேவ திர்யக் ஸ்தாவரரூபமான ஸகலஜீவ சரீரத்திலும் அந்தர்யாமியாயிருந்தும்11 நிர்லேபனா12யிருப்பவனுக்குத் தனக்கென்று ஒரு சரீரம் உண்டானால் முன் சொன்ன தோஷம் வருமென்பது யுக்தமன்று. தேவமனுஷ்யாதிகள் தம்தம் பூர்வகர்மாநுகுணமான சரீரத்திலிருந்து கர்மபலத்தை யனுபவிப்பதால் அவர்களுக்குச்சரீர ஸம்பந்

